# ALAGAPPA UNIVERSITY

**(Accredited with 'A+' Grade by NAAC (with CGPA: 3.64) in the Third Cycle**
**And Graded as category - I University by MHRD-UGC)**
**(A State University Established by the Government of Tamilnadu)**

**KARAIKUDI – 630 003**

## DIRECTORATE OF DISTANCE EDUCATION

## Second Year – Third Semester

## M.A ECONOMICS

## 36231

# பேரியல் பொருளாதாரம் - I

# (MACRO ECONOMICS - I)

# பேரியல் பொருளாதாரம் - I

**பக்க எண்**

**பாடத்திட்டம்**

# பொருளடக்கம்

குறிப்பு

# அலகு 1: அறிமுகம்

அமைப்பு:



## 1.1. பொருள்

**பேரியல் பொருளாதாரம் என்றால் என்ன?**

பொருளாதார இயலை நுண்ணினப் பொருளாதாரம் அல்லது நுண்ணியல் பொருளாதாரம், தொகையினப் பொருளாதாரம் அல்லது பேரியல் பொருளாதாரம் என்று இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். நுண்ணினம் என்றால் சிறியது என்பது பொருள். தொகையினம் என்றால் பெரியது அல்லது மொத்தம் என்பது பொருள்.

நாட்டின் மொத்த சேமிப்பு, மொத்த நுகர்வு, மொத்த வருமானம், மொத்த வேலைவாய்ப்பு போன்றவற்றைப் பற்றிய பொருளாதார அணுகுமுறையைப் பேரியல் பொருளாதாரம் என்கிறோம்.

19 ஆம் நூற்றாண்டில் மால்தஸ், சிஸ்மாண்டி, கார்ல்மார்க்ஸ் போன்றோரும் அண்மையில் வால்ரஸ், விக்செல், ∴பி'ர், கெயின்சு போன்றோரும் பேரியல் பொருளாதாரத்தைப் பிரபலமாக்கியுள்ளனர்.

**இலக்கணம்**

பேரியல் பொருளாதாரத்திற்குப் பலர் விளக்கம் அளித்துள்ளனர். ஒரு சிலரின் விளக்கத்தை இவண் காணலாம்.

குறிப்பு

ஆர். ஜி. டி. ஆலன் பொருளாதார மொத்தங்களிடையே உள்ள தொடர்பை விளக்குவது பேரியல் பொருளாதாரம் என்கிறார்.

N[. எம். கல்பர்டன் வருமானம், வேலை, விலைகள், பணம் ஆகியவற்றைப் பற்றிய கோட்பாடுதான் பேரியல் பொருளாதாரக் கோட்பாடு என்கிறார்.

காட்னர் அக்லே முழு வேலை முழு அளவினாலான அல்லது குறைந்த அளவினாலான உற்பத்தி ஆற்றல், மன நிறைவு தரத் தக்க அல்லது மன நிறைவு தராத பொருளாதார வளர்ச்சி விகிதம், பண வீக்கம் அல்லது மாறா விலை நிலைகள் போன்ற வாழ்க்கையின் பெரிய வினாக்களுக்கு விடையளிக்க பேரியல் பொருளாதாரம் முயலுகிறது என்கிறார்..

மேத்தா நாட்டு வருமானம், மொத்த வேலை, பொதுவான விலை மட்டம் போன்றவற்றைப் பற்றிய முழுமையானதொரு அமைப்பு என்கிறார்.

கே.இ.போல்டிங் இவ்வியலைப் பற்றி விரிவாகக் குறிப்பிடும்போது, தனிப்பட்ட அளவுகளைப் பற்றி அல்லாமல் மொத்த அளவுகளைப் பற்றிப் பேரியல் பொருளாதாரம் விளக்குகிறது என்று கே. இ. போல்டிங் குறிப்பிடுகிறார். இது போல, தனி நபர் வருமானங்களைப் பற்றி அல்லாமல் நாட்டு வருமானத்தைப் பற்றியும், தனிப்பட்ட விலைகளைப் பற்றி அல்லாமல் பொது விலை மட்டத்தைப் பற்றியும், தனிப்பட்ட உற்பத்தி அளவுகளைப் பற்றி அல்லாமல் பொதுவான தேசிய உற்பத்தி அளவுகளைப் பற்றியும் இவ்வியல் விளக்குகிறது.

## 1.2. இயல்பு மற்றும் நோக்கம்:

### பேரியல் பொருளாதாரத்தின் வரம்பு (Scope):

பேரியல் பொருளாதாரத்தின் பரப்பளவு அகன்றதாகும். பல்வேறு முக்கியமான நாட்டுப் பிரச்சினைகளையும், பேரியல் பொருளாதாரம் ஆராய்கின்றது. வேலைக் கோட்பாடு, வருமானக் கோட்பாடு, பணக் கோட்பாடு, பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு, பேரியல் பகிர்வுக் கோட்பாடு ஆகியவை பேரியல் பொருளாதார ஆய்வுமுறையின் அடிப்படையில் அமைந்துள்ளன. வாட்ரஸ், விக்செல், ஃபிஷ்ர், மால்தஸ், காரல் மார்க்ஸ், கீன்ஸ் ஆகியோர் பேரியல் பொருளாதாரத்தை வலியுறுத்தினார்கள்.

வருமானம் மற்றும் வேலைக் கோட்பாடானது நுகர்வு சார்பு, முதலீட்டு சார்பு மற்றும் வாணிபச்சூழல் கோட்பாடுகளை உள்ளடக்கியதாகும். பணக்கோட்பாடானது பணவீக்கம் மற்றும் பணவாட்டத்தைப் பற்றியதாகும். பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடானது வருமானம், உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பு ஆகியவற்றில் ஏற்படும் நீண்டகால வளர்ச்சி பற்றியதாகும். பேரியல் பகிர்வுக் கோட்பாடானது நாட்டு வருமானம் எவ்வாறு உற்பத்திக்

காரணிகளிடம் வாரம், கூலி, வட்டி, இலாபம் என பகிர்ந்தளிக்கப்படுகிறது என விவரிக்கிறது.

குறிப்பு

## 1.3. முக்கியத்துவம்:

தற்காலத்தில் பேரியல் பொருளாதாரச் சிந்தனை முக்கியத்துவம் பெற்றிருப்பதற்குச் சில குறிப்பிடத்தக்க காரணங்கள் உள்ளன. அவற்றை இங்கு தொகுத்துக் கூறலாம்.

**அரசின் பொருளாதாரக் கொள்கைகளை உருவாக்க:**

அரசின் பொருளாதாரக் கொள்கைகளைச் சரியான முறையில் உருவாக்கவும், திறமையாகச் செயல்படுத்தவும் பேரியல் பொருளாதாரம் துணை செய்கிறது. இப்பொழுது முதலாளித்துவ அரசோ, சமதா்ம அரசோ, பொதுவுடைமை அரசோ தனிப்பட்ட மனிதா்களின் பொருளாதார நடவடிக்கைகளை மட்டுமல்ல. குழுக்களின் நடவடிக்கைகளையும், மொத்தப் பொருளாதாரத்தையும் நெறிப்படுத்தவும் கட்டுப்படுத்தவும் வேண்டியிருக்கிறது. பொது விலை மட்டம், பொது உற்பத்தி, மொத்த வணிபம் ஆகியவை தொடர்பான கொள்கைகளை உருவாக்க தொகுப்பு மாறிகளின் விவரங்கள் தேவைப்படுகின்றன. பேரியல் பொருளாதாரம் தான் இதற்குத் துணை செய்கிறது.

**தற்கால பொருளாதார அமைப்பு முறையை அறிய:**

இன்றையப் பொருளாதார அமைப்பு முறை சிக்கலானதாக இருக்கிறது. பல்வேறு சக்திகள் செயல்படுகின்றன. தேசிய வருவாய் மொத்த உற்பத்தி, மொத்தச் செலவு, மொத்தச் சேமிப்பு, மொத்த முதலீடு போன்ற மாறிகள் நாட்டின் பொருளாதாரம் செயல்படுவதில் பெரும்பங்கு பெறுகின்றன. இவற்றைப் புரிந்து கொள்ளாமல் பொருளாதார அமைப்பையும் அது செயல்படும் முறையையும் அதில் தோன்றும் சிக்கல்களையும் புரிந்து கொள்ள இயலாது. இவற்றை அறிய பேரியல் பொருளாதார நோக்கேத் தேவைப்படுகிறது.

**தொகுதிகளின் முக்கியத்துவம்:**

ஒன்றை முழுமையாக அறிய விரும்பும் எந்த அறிவியலும் தனித்தனி உறுப்புகளை மட்டும் ஆராய்ந்தால் போதாது. ஒன்றில் எண்ணற்றவை இருக்கின்ற பொழுது தொகுதிகளின் பொதுமைகளை அறிந்தால்தான் மொத்தத்தைப் பற்றிய உண்மைகளை உணர முடியும். பொருளாதாரம் விரிந்து பரந்ததாகவும் எண்ணற்றப் பகுதிகளைக் கொண்டதாகவும் இருப்பதால், தனிப்பட்ட சிலவற்றிலிருந்து பொருளாதாரம் முழுமைக்குமான உண்மைகளை அறிய முடியாது. பொருளாதார உறுப்புகளின் தொகுதிகளையும், சராசரிகளையும் அறிய பேரியல் பொருளாதார அணுகுமுறை ஏற்றதாக இருக்கின்றது.

குறிப்பு

**பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைக் கட்டுப்படுத்த:**

நமது பொருளாதார நடவடிக்கைகளில் ஏற்படுகின்ற ஏற்றத்தாழ்வுகள் பொருளாதாரத்தைப் பெரிதும் பாதிக்கின்றன. மந்தம், பண வீக்கம், வாணிபச்சுழல் போன்றவை முதலாளித்துவப் பொருளாதாரத்தை ஆட்டிப்படைக்கின்றன. பொருளாதார ஊஞ்சலாட்டங்களின்றி நிலையான பொருளாதார வளர்ச்சியைப் பெற எல்லா நாடுகளும் முயல்கின்றன. இதற்கு மொத்தச் சேமிப்பு, முதலீடு ஆகியவற்றைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டியது தேவையாகும். பேரியல் பொருளாதார ஆய்வின் மூலம் தான் இவற்றின் போக்கினை அறிந்து கட்டுக்குள் அடக்கி பொருளாதார நடவடிக்கைகள் திடீரென்று கூடுவதையோ குறைவதையோ முற்றிலும் நீக்க முடியாவிட்டாலும் கட்டுப்பாட்டிற்றுள் கொண்டு வர இயலும்.

**எதிர்காலப்போக்கை சரியாக கணிக்க:**

பொருளாதாரத்தின் பொதுமை போக்குகளை எதிர்காலத்தில் எப்படி அமையுமென்றுக் கூற, மூலதனம், மக்கள்தொகை, வாணிபம், தொழில் ஆகியவை பற்றிய தொகுப்புப்புள்ளி விவரங்கள் தேவை. பொருளாதாரத்தின் முக்கிய கூறுகள் தொகுதியின் முறைமையில் எப்படி மாறுகின்றனவென்ற பேரியல் கண்ணோட்டமில்லாமல் அவை எதிர்காலத்தல் எப்படி மாறும் என்பதையோ, பொருளாதாரம் எப்படி இருக்கும் என்பதையோ முன்கூட்டியே யூகித்துக் கூற முடியாது.

**பொருளியல் கோட்பாடுகளை ஆராய:**

நுண்ணின நோக்கில் பொருளியல் கோட்பாடுகளை ஆராய்வது முழுமையாக இருப்பதில்லை என்பதை பொருளியலறிஞர்கள் உணர்கின்றனர். பொருளாதாரத்தின் மொத்த நிலையை விளக்க இயலாமல் தொன்மைக் கோட்பாடுகள் தடுமாறுகின்றன. ஆதலால் பேரியல் அணுகுமுறையின் பொருளாதார நிலையை விளக்கும் கோட்பாடுகளை உருவாக்குவதும் ஆராய்வதும் தேவையாகின்றன.

**நுண்ணினப் பொருளியலுக்கு உதவி:**

பேரினப் பொருளியல் நுண்ணினப் பொருளியலின் கோட்பாடுகளை உருவாக்குவதற்கும் புரிந்து கொள்வதற்கும் துணை செய்கின்றது. தொகையின் அணுகுமுறையின் தொகுதிகளை பெருமளவில் ஆராய்வது பொருளியல் கோட்பாடுகளை உருவாக்க வழிவகுக்கின்றது. எடுத்துக்காட்டாக குறைந்துசெல் பயன்பாட்டு விதியை உருவாக்க எண்ணற்ற நுகர்வோரின் அனுபவங்களை தொகுத்து அறிவது துணை செய்கின்றது. இதேபோல் இருக்கின்ற நுண்ணியல் பொருளில் கோட்பாடுகளை சரிதானாவென்று சோதித்துப்பார்க்கவும் பேரியல் பொருளாதாரம் உதவுகின்றது.

குறிப்பு

**வாணிபச் சூழல் கோட்பாடுகள்:**

முதலாளித்துவப் பொருளாதாரத்தில் உள்ளார்ந்த சீர்கேடாக வாணிபச்சூழல் இருக்கின்றது. 1930 வரை வாணிபச் சூழலைப் பற்றி உருவான கோட்பாடுகள் எல்லாம் ஏதாவது ஒரு நோக்கிலேயே வாணிபச் சூழலை ஆராய்ந்தன. பேரியல் பொருளாதாரம் வளர்ச்சிப் பெற்றிருப்பதால் இப்பொழுது வணிபச் சூழலை மொத்தப் பொருளாதார நோக்கில் ஆராய்ந்து அதனைத் தீர்க்க பண, நிதி, பிற நடவடிக்கைகளை எப்படி மேற்கொள்வதென்பதைப் பற்றி தீர்மானிக்க இயல்கின்றது.

**முழுநிறைவேலைவாய்ப்பு:**

நாட்டிலுள்ள மக்களுக்கெல்லாம் வேலைவாய்ப்பை வழங்குவது இன்றைய அரசின் தலையாய பொறுப்பாயிருக்கிறது. முழுநிறை வேலைவாய்ப்பைத் தீர்மானிக்கின்ற வருவாய், நுகர்வு, சேமிப்பு, முதலீடு ஆகிய எல்லாம் பேரியல் பொருளாதாரத்தின் கருத்துக்களாகும். பொதுச் சமநிலையைப் பற்றி ஆராயும் பெரியல் பொருளாதார அணுகுமுறையின் மூலம் முழுநிறை வேலைவாய்ப்பை அடைய முடியும்.

**தேசிய வருவாயை அளக்க, ஆராய:**

எல்லா நாடுகளும் தங்களத வருவாயை பெருக்குவதில் கண்ணும் கருத்துமாக இருக்கின்றன. கெயின்ரீயனுக்கு முன்னால் மார்'ல், பி'ர் போன்றவர்கள் தேசிய வருவாயைப் பற்றி ஆராய்ந்த போதிலும் கெயின்ரீயனின் பொருளியல் கருத்துக்குப் பிறகே நாட்டின் வருமானத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்து அறிவியலடிப்படையில் அதனை ஆராய்ந்தனர். பேரியல் பொருளாதார வளர்ச்சி நாட்டு வருமானத்தைக் கணிக்கவும், ஆராயவும் வாய்ப்பளித்துள்ளது. 1971ல் அமெரிக்கப் பொருளியலறிஞரான சைமன் குட்நட்ஸ் நாட்டு வருமான ஆய்வில் அரிய கருத்துக்களைக் கூறி நோபல் பரிசு பெற்றது குறிப்பிடத்தக்கதாகும்.

**பொருளாதார வளர்ச்சி:**

ஐக்கிய நாடுகள் சபையின் முயற்சியால் உலக நாடுகள் எல்லாம் பொருளாதார வளர்ச்சி பெற பாடுபடுகின்றன. சிலநாடுகள் மிகவும் முன்னேறியும், சில நாடுகள் வறுமையில் வாடிக்கொண்டும் இருக்கின்ற நிலையை மாற்றுவது தேவையாகின்றது. வறுமை, வளர்ச்சி சிக்கல்களை ஆராய தொகுதிக் கண்ணோட்டமே தேவையாகின்றது. பேரியல் பொருளாதார ஆய்வின் விளைவால் விரைவான போக்குவரத்து வளர்ச்சிக்கான வழி முறைகளை கூற இயல்கின்றது.

குறிப்பு

**பணவீக்கமும் பணவாட்டமும்:**

நாட்டு மக்களின் வாழ்க்கையை பணவீக்கமும், பணவாட்டமும் அடிக்கடி பாதிக்கின்றன. ஒரே சீராக அமையும் பொருளாதார வாழ்க்கையைப் பண வீக்கமும் பணவாட்டமும் பாதிக்கின்றனவென்று கெயின்ரீயன் கருதுகின்றார். இரண்டும் நுகர்வுச் செலவு, முதலீடு, உற்பத்தி ஆகியவற்றை ஒட்டியே ஏற்படுகின்றன. இவற்றில் தன்மைகளை ஆராயவும் இவற்றைத் தீர்க்கவும் பேரியல் பொருளாதார அணுகுமுறையே துணை செய்கின்றது.

மொத்தத்தில் பொருளாதாரத்தை முழுமையாக அறிந்து கொள்ள, தேசிய வருவாய் உற்பத்தி, முதலீடு, சேமிப்பு, நுகர்வு ஆகிய தொகுதியினக் கருத்துகள் துணை செய்கின்றன. பேரியல் பொருளாதார அணுகுமுஜற பொருளாதார வளர்ச்சிக்கு பெரிதும் தூண்டுதலாக உள்ளது.

## 1.4. நுண்ணியல் பொருளாதாரம் மற்றும் பேரியல் பொருளாதாரம்:

'நுண்ணியது' எனறால் 'சிறியது' என்பது பொருள். பொருளாதாரத்தின் தனித்த அங்கங்களைப் பற்றிக் கற்பது நுண்ணியல் பொருளாதாரம், தனிப்பட்ட நிறுவனங்களைப் பற்றியும், தனிப்பட்ட மனிதர்களைப் பற்றியும், தனிப்பட்ட விலைகளைப் பற்றியும் மற்றும் இவை போன்றவற்றைக் கற்பது நுண்ணியல் பொருளாதாரம் என போல்டிங் விளக்கம் தருகின்றார்.

நுண்ணியல் பொருளாதாரப் பகுத்தாய்வை மூன்று நிலைகளில் விளக்கலாம். 1) தனி நுகர்வோர் , உற்பத்தியாளர் ஆகியோரின் சமநிலை 2) எல்லாச் சந்தைகளும் ஒரே நேரத்தில் நிகழும் சமநிலை ஆகியவை ஆகும்.

முழு வேலை நிலவுகிறது. மூல வளங்கள் குறிப்பிட்டதொரு அளவில் இருக்கின்றன என்ற இரு இன்றியமையாத எடுகோள்களை நுண்ணியல் பொருளாதாரத்தில் நாம் பயன்படுத்துகின்றோம். இவ்வெடுகோள்கள் உண்மை நிலைக்குப் புறம்பானவை என்பது நுண்ணியல் பொருளாதாரத்தின் பெருங்குறையாகும்.

**நுண்ணியல் பொருளாதாரம் பேரியல் பொருளாதாரம் ஆகியவற்றிடையே காணப்படும் வேற்றுமைகள்**

| நுண்ணியல் பொருளாதாரம் | பேரியல் பொருளாதாரம் |
|---|---|
| தனி நபர்களின் அல்லது தனி நபர்களின் அல்லது தனி நபர்களின் தொகுப்புக்களின் பொருளாதார நடவடிக்கைகளை இப்பகுதியில் கற்கிறோம். | மொத்த வேலை, மொத்தச் சேமிப்பு, மொத்த முதலீடு, தேசிய வருமானம் போன்ற மொத்த நிலைகளைப் பற்றி இப்பகுதியில் கற்கிறோம். |
| பலவித அங்காடி | தேசிய உற்பத்திநிலைகளைப் |

குறிப்பு

| | |
|---|---|
| அமைப்புக்களில் விலை, உற்பத்தி அளவுகள் ஆகியவற்றின் நிர்ணயம் பற்றியும், பொருளாதார மூல வளங்களைக் குறிப்பிட்ட பயனில் எவ்வாறு பகிர்ந்தளிப்பது என்பதைப் பற்றியும் இப்பகுதியில் கற்கிறோம். | பகுத்தாராய்தல், நாட்டில் உள்ள மொத்த பொருளாதார மூல வளங்களை எவ்வாறு சிறப்பாக பயன்படுத்தும் முறை என்பன போன்றவற்றை இப்பகுதியில் கற்கிறோம். |
| குறிப்பிட்டதொரு பொருளாதார நிறுவனத்தின் சமநிலைப் பகுதிச் சமநிலை எனப்படும். இத்தகைய பகுதிச் சமநிலையை நுண்ணியல் பொருளாதாரத்தில் பயன்படுத்துகிறோம். | பல விதமான பொருளாதார மாறிகளையும் கருத்தில் கொண்டு நாட்டின் பொருளாதார முழுமைக்கும் பொருத்தமான சமநிலைப் பொதுச் சமநிலை எனப்படும். இப்பொதுச் சமநிலையைப் பேரியல் பொருளாதாரத்தில் பயன்படுத்துகிறோம். |

## 1.5. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. பேரியல் பொருளாதாரத்தைப் பற்றிக் கூறுக.

2. பண வீக்கம் என்றால் என்ன?

## 1.6. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. பேரியல் பொருளாதாரம் என்பது வருமானம், விலைகள், பணம் ஆகியவற்றைப் பற்றிக் கூறுவதாகும்.

2. பண வீக்கம் என்பது பணத்தின் மதிப்பு குறைவதாகும்.

## 1.7. சுருக்கம்

- பேரியல் பொருளாதாரம் என்பது அதனுடைய பொருளாதாரத்தின் பரப்பளவு அதனுடைய பல்வேறு முக்கியமான நாட்டுப் பிரச்சினைகள் மற்றும் வேலைக்கோட்பாடு, வருமானக் கோட்பாடு, பணக் கோட்பாடு, பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு ஆகியவற்றைப் பற்றியும் அதனுடைய முக்கித்துவததைப் பற்றியும் அதனால் வாணிபச் சூழல் கோட்பாடுகளைப் பற்றித் தெளிவாகக் கூறுகிறது.

குறிப்பு

## 1.8. முக்கிய வார்த்தைகள்

**பண வாட்டம்:** பண வாட்டம் என்பது பணத்தின் மதிப்பைக் கூட்டுவதாகும்.

**நுண்ணியல் பொருளாதாரம்:** நுண்ணியல் என்றால் சிறியது என்பது பொருள். இந்தப் பொருளாதாரம் தனிப்பட்ட மனிதர்களைப் பற்றியும் கூறுவதாகும்.

## 1.9. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

### குறுகிய வினாக்களுக்கு விடையளி.

1.தேசிய வருமானம் என்றால் என்ன?

2.பண வீக்கத்தைப் பற்றிக் கூறுக

### .நெடுவினாக்களுக்கு விடையளி.

1. பேரியல் பொருளாதாரத்தின் வரம்பைப் பற்றி விளக்குக.

2. நுண்ணியல் பொருளாதாரத்தையும் பேரியல் பொருளாதாரத்தையும் வேறுபடுத்திக் கூறுக.

## 1.10. பரிந்துரைக்கப்படும் நூல்கள்


1. மிதானி னு.ஆ. (2003), ‘‘நவீன பொருளாதார பகுப்பாய்வு’’ ஹிமாலயா பப்ளிஷிங் ஹவுஸ், மும்பை

# அலகு 2 தேசிய வருவாய் கணக்கியல்

குறிப்பு

**அமைப்பு**



## 2.1. பொருள்:

பேரியல் பொருளாதாரம் பொருளாதாரத்தை மொத்தமாக அணுகுகின்றது. தொகுதிகளின் வழியாக பொருளாதாரத்தை ஆய்கின்றபொழுது மொத்த வேலைவாய்ப்பு, மொத்த உற்பத்தி, மொத்தச் செலவு போன்ற ஓட்டத்ஜகுடழறஸ தொகுதிகளை ஆராய்கின்றோம். எல்லா வகையான பொருளாதார நடவடிக்கைகளும் இணைந்தே இவற்றைத் தீர்மானிக்கின்றன. இவற்றின் மையமாறியாகஜஏயசயைடிடநஸ நாட்டின் வருவாய் இருக்கின்றது. ஆதலால் அதனைப்பற்றித் தெளிவாகத்தெரிந்து கொள்ளுதல் பேரியல் பொருளாதாரத்தில் தலையாய இடத்தைப் பெறுகின்றது.

## 2.2. கருத்துக்கள்:

நாட்டு வருவாயைப் பல்வேறு வகைகளில் பலரும் விளக்கியுள்ளனர். ஒவ்வொரு வினக்கமும் ஒவ்வொரு கோணத்தில் அமைந்துள்ளது முக்கியமானவற்றை மட்டும் இங்கு காணலாம்.

ஆல்பிரட் மார்'ல், "ஒரு நாட்டின் உழைப்பும் முதலும் அதனுடைய இயற்கைவளங்களோடு இணைந்து செயல்பட்டு ஆண்டு தோறும் பல்வேறு பணிகளையும் உள்ளடக்கிய புலனாகும். புலனாகாத பொருட்களின் ஒரு குறிப்பிட்ட நிலத் தொகுதியை உருவாக்குகின்றன. இத்தோடு அன்னிய முதலீட்டின் மூலம் கிடைக்கும் நிகர வருவாயையும் கூட்ட வேண்டும். இதுதான் உண்மையான ஆண்டு வருவாய்", என்று கூறுகின்றார். இதில்

குறிப்பு

நிகரம் என்பது மொத்த உற்பத்தியின் மதிப்பில் மூலதனத் தேய்மானத்தைக் கழித்து வருவதைக் குறிக்கின்றது.

பேராசிரியர் பிகுஜீபைழரஸ, “வெளிநாட்டிலிருந்து கிடைக்கும் வருவாயை உள்ளடக்கிய பணத்தால் அளக்கக்கூடிய சமுதாயத்தின் மொத்த வருவாயை நாட்டு வருவாய் என்கிறோம்” என்கின்றார்.

பேராசிரியர் பி'ர்ஜகுளைாநசஸ உற்பத்திக்குப்பதிலாக நுகர்வை அடிப்படையாகக் கொண்டு நாட்டு வருவாயை விளக்குகின்றார். அவர், “நாட்டுவருவாய் என்பது இறுதி நுகர்வோர்கள் அவர்களுடைய உலகியல் அல்லது மனிதச் சூழலில் அடைகின்ற பணிகளைக் கொண்டதாகும்”, என்று கூறுகின்றார்.

பேராசிரியர் சாமுவேல்சன் ஜளுயஅரளநடளழஸெ ஒரு பொருளாதாரத்தில் ஓர் ஆண்டில் மொத்தமாக உருவாகும் பொருட்களின், பணிகளின் பண அளவுக்கு நாம் பொதுவாகக்கொடுக்கும் பெயர் தேசிய உற்பத்தியை உருவாக்குவதில் எல்லா உழைப்புக்கும் சொத்துக்கும் கிடைக்கும் வருவாயின் மொத்த தொகுதியே நாட்டு வருவாய் என்கின்றார்.

தற்காலத்தில் நாட்டுப் பொருளாதளரத்தில் நடப்பு ஆண்டில் உற்பத்தி செய்த பொருட்கள், பணிகளின் மூலம் உற்பத்தி காரணிகளின் தொகுதிகுளுக்குக் கிடைக்கும் வருவாயையே நாட்டு வருவாய் என்கின்றோம். இதனையே மூன்று வகைகளில் விளக்கலாம். 1) மொத்த வருவாயைக் குறிக்கின்றது. 2) இது மொத்த செலவைக் குறிக்கின்றது. ஒருவரின் செலவு மற்றவரின் வருவாயாவது கவனிக்கத்தக்கது. 3) மொத்த உற்பத்தியின் மதிப்பு.

நாட்டு வருவாய் விளக்கங்களிலிருந்து மூன்று முக்கிய கருத்துக்களைச் சுட்டிக்காட்டலாம். 1) நாட்டு வருவாய் என்பது ஒரு குறிப்பிட்ட நாட்டின் (எடுத்துக்காட்டாக இந்தியாவின்) வருவாயைக் குறிக்கின்றது. 2) இது ஒரு குறிப்பிட்ட காலத்தில் (ஓராண்டில்) கிடைத்த வருவாயின் அளவைக் கூறுகின்றது. 3) ஒரே ஒரு தடவை கணக்கில் வரும் மாற்று மதிப்புடைய எல்லா வகையான பொருட்களும் பணிகளும் நாட்டு வருவாயில் சேரும்.

## 2.3.அளவீடு

தனிப்பட்ட நிறுவனங்கள் இருமுறைக் கணக்கு வைப்புமூலம் ஜனுழரடிடந நுவெசல டீழழம-முநநிபைெஸ வரவுகளையும், செலவுகளையும் கணக்கு வைத்து, இறுதியில் இருப்பு நிலைக்குறிப்பு ஜடீயடயஉெந ளுாநநவஸ தயாரிக்கின்றன. இதே போல ஒரு நாடு முழுமைக்கும் இருமுறை கணக்கு வைப்பு முறையின் மூலம் எல்லா வரவுகளையும், செலவுகளையும் கணக்கெழுதும் முறையை சமுதாயக்கணக்கு வைப்பு ஜளுழஉயைட

குறிப்பு

யஉ உழரவெபைெஸ என்று கூறலாம். இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் சமீபகாலத்தில் இம்முறை முக்கியத்துவம் பெற்றுவருகின்றது.

சமுதாய கணக்கு வைப்பு முறையில் நாட்டு வருவாயின் மதிப்பீடுகளை பலவழிகளில் வெளியிடலாம். அவற்றில் ஒன்று பொருளாதாரத்தை 1)தனி மனிதத் துறை (இல்லத்துறையும் நிறுவனமும்) 2)வாணிபத் துறை 3)அரசுத்துறை 4)அயல் நாட்டுத்துறை என்று நான்காகப் பகுத்து, ஒவ்வொன்றைப் பற்றியும் விரிவாகக் கணக்கு வைக்கலாம்.

இன்னொரு வகையில், சமுதாயத்தின் பொருளாதார நடவடிக்கைகளை 1 நுகர்வு 2 உற்பத்தி 3 முதலாக்கம் 4 வெளிநாட்டு நடவடிக்கைகள் எனப்பகுத்து, இவற்றைச் செய்கின்ற 1 நுகர்வோர்கள் 2 உற்பத்தியாளர்கள் 3 சேமிப்பாளர்கள் 4 வெளிநாட்டுப் பணிகளில் ஈடுபடுபவர்கள் என்ற அடிப்படையில் 1) நுகர்வுக் கணக்கு அல்லது செலவுக்கணக்கு(யீசழிசயைவழைெ யஉஉழரவெ) 2) உற்பத்திக் கணக்கு ஐழுநசயவழைெ யஉஉழரவெஸ 3) மூலதனக் கணக்கு (சுநளவைபெ யஉஉழரவெ) 4) வெளிக் கணக்கு (நுஒவநசயெட யஉஉழரவெ) என்று கணக்குகளை வைக்கலாம்.

சமுதாயக் கணக்கு வைப்பு முறையால் சில குறிப்பிடத்தக்க பயன்கள் கிடைக்கின்றன. நாட்டு வருவாயை வகைப்படுத்த முடிகின்றது. எந்தெந்த நடவடிக்கைகளில் வருவாய் கிடைக்கின்றதென்பதையும் எந்தெந்த வழிகளில் செலவானதென்பதற்கும் கணக்கு இருக்கும். சமுதாயக் கணக்கு வைப்புமூலம் பொருளாதார அமைப்பையும், அதில் பல்வேறு துறைகளின் பங்கையும் உணரச் செய்து பொருளாதார முன்னேற்றத்திற்கு துணை செய்கின்றது.

**மொத்த தேசிய உற்பத்தி [Gross National Product or G.N.P] :**

ஒரு நாட்டில் ஓராண்டுக் காலத்தில் உற்பத்தியாகும் எல்லா இறுதி நிலைப் பணிகள், பொருட்களின் மொத்த அங்காடி மதிப்பை மொத்த தேசிய உற்பத்தி அல்லது ஆக்கம் என்கின்றோம். மொத்த நாட்டு உற்பத்தியைக் கணக்கிடும் பொழுது இரு கருத்துக்களை கவனத்தில் கொள்ள வேண்டும். முதலாவதாக, இது நாட்டில் உற்பத்தியான பொருட்கள், பணிகளின் பண மதிப்பையே குறிக்கின்றது. ஆதலால் வெவ்வேறு கால தேசிய வருவாயைக் கணக்கிடும் பொழுது விலை வேறுபாட்டைக் கவனிக்க வேண்டும். இரண்டாவதாக, மொத்த தேசிய வருவாயை கணிக்கும் பொழுது உற்பத்தியான பொருட்கள் பணிகளை ஒரு தடவை மட்டுமே கணக்கிட வேண்டும். எதுவும் இரண்டாம் முறை கணக்கில் வராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அதாவது இறுதிநிலைப் பொருட்களின் மதிப்பை கணக்கிட வேண்டும். துணியின் மதிப்பை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும் பருத்தியின் மதிப்பைக் கணக்கிடக் கூடாது.

குறிப்பு

பொதுவாக அங்காடி விலையில் மொத்த நாட்டு வருவாயைக் கீழ்க்கண்டவாறு சுட்டிக் கணக்கிடலாம். 1) தனி மனிதர்களின் நுகர்வுச் செலவுகள் 2) வாணிப நிறவனங்கள் மாற்றுகின்ற, புத்தாக்கம் செய்கின்ற, புதிய முதலீட்டுச் செலவுகள், அதாவது உள்நாட்டில் ஏற்படுகின்ற மொத்த தனியார் முதலீடு: 3) அரசு பொருட்களையும், பணிகளையும் வாங்கச் செலவிடும் தொகை 4) ஏற்றுமதி எச்சமாக அல்லது நிகர வெளிநாட்டு முதலீடாக அமைவது, அதாவது ஒரு நாடு வெளிப்பொருளாதாரத்தில் செலவிடுவதற்கு மேலாக வெளிநாட்டுப் பொருளாதாரம் அந்த நாட்டில் செலவிடுவது. மொத்த நாட்டு உற்பத்தியைக் கணிப்பதில் 1) பொருட்கள் பணிகளின் அங்காடி விலையை நிர்ணயித்தல் 2) சொந்தக்காரர்களே பயன்படுத்தும் வீடுகள், வண்டிகள் போன்றவற்றின் வருவாயை மதிப்பிடல் 3) வீட்டில் உழைக்கும் தாய்மார்களின் உழைப்புக்கு கூலியை நிர்ணயித்தல் 4) இடைநிலைப் பொருட்களையும் இறுதிநிலைப் பொருட்களையும் பிரித்தல் போன்ற சிக்கல்கள் எழுகின்றன.

### (ii)நிகரதேசிய உற்பத்தி [Net National Product or N.N.P] :

நாட்டில் உற்பத்தி நடைபெறுகின்றது. கருவிகள் மூலதனங்கள் தேய்வடைகின்றன. ஆதலால் நாட்டின் மொத்த உற்பத்தியில் இழக்கப்படுகின்ற மூலதனத் தேய்மானத்தைக் ஜனுநிசநஉயைவழைஸெ கழித்துக் கிடைப்பதை நிகர தேசிய உற்பத்தி என்கின்றோம். இதன் அங்காடி மதிப்பை நிகர தேசிய வருவாய் என கணக்கிடலாம்.

நிகர தேசிய வருவாயைக் கணிப்பதில் 1)தேய்மானத்தைச் சரியாக மதிப்பிடுதல்: 2)விலை ஏற்றக் காலத்தில் எந்திரத்தின் எந்த விலையை எடுப்பதென்பது 3)இடைக்காலத்திலேயே எந்திரம் பழுதடைதல் போன்ற சிக்கல்கள் உள்ளன.

நிகர தேசிய உற்பத்திக் கருத்து உண்மையாக நாட்டு வருவாய் எவ்வளவு கூடுகின்றதென்று காட்டுவதால் முக்கியத்துவம் பெறுகின்றது. அடுத்து, நாட்டில் சரியான பொருளாதார வளர்ச்சி பெற மூலதனத்தின் உற்பத்தியை நீண்டகாலத்தில் இவ்வளவு கூட்ட வேண்டுமென்பதை உணர்த்த இக்கருத்து துணைசெய்கிறது.

### (iii)தலா வருவாய் [Per Capital Income]:

ஒரு நாட்டின் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இருக்கின்ற வருவாயை அந்த நாட்டின் அக்காலத்தின் இருக்கும் மக்கள் தொகையால் வகுத்துப் பெறும் வருவாயை தலா வருவாய் அல்லது சராசரி வருவாய் என்கிறோம்.

### (iv)தனி நபர் வருவாய் [Personal Income]:

மொத்த வருவாயும் அந்த நாட்டு மக்கள் பெறுகின்ற வருவாயும் ஒரே அளவாக இருப்பதில்லை. நாட்டு வருவாயின் நிறுவனங்கள் செலுத்துகின்ற வரிகள், பகிர்ந்தளிக்காமல் வைத்திருக்கும் நிதிகள் தனியார் செலுத்தும்

முதுமைக்கால ஓய்வு ஊதியம் பங்குத்தொகை ஆகியவற்றை கழித்த வருகின்ற தொகையை தனியார் பெறுகின்றனர். பொதுவாக கூலிகள், சம்பளம, வட்டி, வாரம். பங்குத்தொகை என்று தனி மனிதர்கள் பெறுகின்ற வருவாயை தனி மனித வருவாய் என்று குறிப்பிடுகின்றோம்.

குறிப்பு

தனி மனித வருவாய் நாட்டு மக்களிடம் இருக்கின்ற மொத்த வாங்கும் சக்தியை அறிய உதவுகின்றது.

**(v)செலவிடத்தக்க வருவாய் [Disposable Income]:**

ஓரு மனிதர் பெறுகின்ற வருவாயை எல்லாம் அவர் விருப்பம் போல் செலவிட இயலாது. அவர் பெறுகின்ற வருவாயில் வருமான வரி, சொத்து வரி போன்ற வருவாயை எல்லாம் அவர் விருப்பம் போல் செலவிட இயலாது, அவர் பெறுகின்ற வருவாயில் வருமான வரி, சொத்து வரி, போன்ற வரிகளையும் காப்பீட்டுக்கட்டணம் போன்றவற்றையும் கட்டாயம் கட்டவேண்டியுள்ளது. இவை செலுத்தியது போக எஞ்சும் பணத்தை தான் ஒருவர் சேமிக்கவோ, செலவிடவோ செய்யலாம். இந்தத் தொகை தான் ஒருவரின் உண்மையான வாங்கும் சக்தியை, வாழ்க்கைத்தரத்தைக் காட்டுகின்றது.

## 2.4. தேசிய வருமானம் தரவு முக்கியத்துவம்:

நாட்டு வருவாய் பற்றிய கணக்கீடும், புள்ளி விவரங்களும் பொருளாதாரத்தில் மிகவும் முக்கியத்துவமுடையதாகவும் பல்வேறு பயன்களைக் கொண்டதாகவும் இருக்கின்றன. நாட்டு பொருளாதாரம் செயல்படுவதையும் அதன் பல்வேறு இனங்களையும் பற்றி அறியவும் உதவி செய்கின்றன. கீன்சின் “வேலை வாய்ப்பு, வட்டி, பணம் பற்றிய பொது கோட்பாடு” (1936) நூல் வெளியாகி, பேரியல் பொருளாதார நோக்கு முக்கியத்துவம் பெற்ற பிறகு நாட்டு வருவாயைப்பற்றி எல்லோரும் எண்ணிப்பார்க்கத் தொடங்கினர். நாட்டு வருவாய் மதிப்பீடுகளின் பயன்களை இங்கு தொகுத்துக் கூறலாம்.

**1. உற்பத்தி நிலையை அறிய:** நாட்டு வருவாய் மதிப்பீடு நாட்டின் உற்பத்தி அளவைக் காட்டுகின்றது. உற்பத்தியைச் சார்ந்தே மக்களின் நலம் அமைகின்றது. நாட்டு வருவாய் தலை வருவாய் மதிப்பீட்டிலிருந்து உற்பத்தி நிலை, மக்கள் நலம் ஆகியவற்றை அறியலாம்.

**2. பொருளாதார நிலை:** சில ஆண்டுகளில் நாட்டு வருவாய் மதிப்பீடுகளிலிருந்து பொருளாதாரம் வளர்கின்றதா தேக்க நிலையில் உள்ளதா, தேய்கின்றதாவென்பதை அறியலாம். பொருளாதார வளர்ச்சி வீதத்தை அளக்கவும் நாட்டு வருவாய் விவரம் துணை செய்கின்றது.

**3. பொருளாதார கொள்கையை உருவாக்க:** பேரியல் நோக்கில் நாட்டில் நாட்டின் மொத்த பொருளாதார நடவடிக்கைகளை ஆராயவும், எதிர்காலப்

குறிப்பு

பொருளாதார கொள்கைகளை உருவாக்கவும், நாட்டு வருவாய் பற்றிய விவரங்கள் துணை செய்கின்றன.

**4. திட்டமிடுதல்:** பொருளாதாரத் திட்டங்களை உருவாக்கவும் நாட்டு வருவாய் விவரங்கள் உற்ற துணையாக உள்ளன. வருவாயின் போக்குத் தெரிந்தால் தான் நாட்டின் வளர்ச்சிக்குத் திட்டமிட இயலும்.

**5. பல்வேறு துறைகள்:** நாட்டு வருவாய் விவரங்கள் நாட்டு வருவாயில் நாட்டிலுள்ள பொருளாதாரத் துறைகளின் பங்கினை அறிய உதவுகின்றது. எடுத்துக்காட்டாக, நமது நாட்டு வருவாயில் 50மூ வேளாண்மை மூலம் கிடைக்கின்றது. இதிலிருந்து நமது பொருளாதாரத்தில் வேளாண்மையின் முக்கியத்துவத்தை அறிகின்றோம்.

**6.பகிர்வை அறிய:** நாட்டு வருவாய் கூலியாக வாரமாக, வட்டியாக, ஆதயமாக எந்த விகிதத்தில் பகிரப்பட்டிருக்கின்ற தென்பதையும், வருவாய் ஏற்றத்தாழ்வு எப்படி, எந்த வீதத்தில் இருக்கின்றதென்பதையும் நாட்டு வருவாய் விவரங்களிலிருந்து அறியலாம்.

**7. வரவு-செலவு திட்டம்:** அரசின் வரவு செலவுத் திட்டத்தை உருவாக்க நாட்டு வருவாய் விவரங்கள் உதவுகின்றன. பணவீக்க, பணவாட்டப் போக்கை அறிய, வாணிபச்சுழலைத் தடுக்க எடுக்க வேண்டிய நடவடிக்கைகளைத் தீர்மானிக்க, வரிவிதித்தல், பொதுக் கடன் வாங்குதல் ஆகியவற்றின் வாய்ப்புக்களைக்காண வருவாய் விவரங்கள் வழிகாட்டுகின்றன.

**8. தேசியச்செலவு:** நாட்டில் நுகர்வுச் செலவும் முதலீட்டுச் செலவும் எப்படி அமைகின்றதென்பதையும் எந்த அளவிற்கு மூலதனக்கழிவுக்கு நிதிஒதுக்க வேண்டுமென்பதையும் வருவாய் விவரங்களிலிருந்து கண்டுகொள்ளலாம்.

**9. மானிய உதவி:** கூட்டாட்சியில் மத்திய அரசு மாநில அரசுகளுக்கு அளிக்கும் மானிய அளவைத் தீர்மானிக்கும் காரணிகளில் முக்கியமானதாக நாட்டு வருவாய் உள்ளது.

**10. வாழ்க்கைத் தரத்தை ஒப்பிட:** பல்வேறு நாடுகளில் வாழும் மக்களின் வாழ்க்கைத் தரங்களையும் ஒரே நாட்டில் பல்வேறு காலங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைத் தரங்களையும் ஒப்பிட்டு பார்க்க நாட்டு வருவாய் விவரங்கள் பெரிதும் துணைசெய்கின்றன.

**11. பன்னாட்டுப் பொருளாதாரத் தொடர்புகள்:** ஐக்கிய நாட்டுச்சபை, பன்னாட்டுப் பணநிதி, உலகவங்கி போன்ற நிறுவனங்கள் நாடுகளுக்கிடையில் கடன் பொறுப்புக்களை நிர்ணயிக்கின்ற பொழுது நாட்டு வருவாய் விவரங்களைப் பயன்படுத்துகின்றன.

**12. பொதுத் துறையின் பங்கு:** நாட்டு வருவாய் விவரங்களிலிருந்து தனியார் துறையும், பொதுத்துறையும் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் எந்த அளவில் பங்கு பெறுகின்றனவென்பதை அறியலாம். பொதுத் துறையின் பங்கு

குறிப்பு

என்னவென்பதை அறியலாம். பொதுத் துறையின் பங்கு என்னவென்பதை நாட்டு வருவாயின் பகிர்விலிருந்து சரியாக மதிப்பிடலாம்.

## 2.5. அளவீட்டு சிரமங்கள்:

நாட்டு வருமானத்தை துல்லியமாகக் கணக்கிடுவதில் பல சிக்கல்கள், இடையூறுகள் உள்ளன. அவை பின்வருமாறு.

**1.நாடு என்பது பற்றிய வரையறை:**

அரசியல் ரீதியாக நாடு என்பது ஒரு குறிப்பிட்ட பூகோள எல்லைக்குள் அமைந்த நிலப்பரப்பை குறிக்கும். பொருளாதார ரீதியாக நாடு என்பது அரசியல் எல்லையைத் தாண்டியதாகும். உண்மையில் நாட்டு வருமானம் என்பது அந்த நாட்டில் மட்டுமல்லாமல் பிறநாடுகளிலும் நாட்டு மக்களால் உருவாக்கப்படும் வருமானத்தையும் உள்ளடக்கி இருக்கிறது. ஒரு நாட்டின் வருமானத்தில் அந்நாட்டில் உருவாக்கப்படும் வருவாய் மட்டுமன்றி நாட்டிற்கு வெளியில் ஈட்டுவதும் சேர்வதால் நாட்டின் எல்லையை திட்டவட்டமாக வரையறுக்க இயலவில்லை.

**2.பின்தங்கிய நாடுகளில் உள்ள பிரச்சனைகள்:**

நாட்டு வருவாயை கணக்கிடுவதில் இந்தியா போன்ற வளர்ச்சி குன்றிய நாடுகளில் பின்வரும் பிரச்சினைகள் உள்ளனர்.

வேளாண்மையில் ஒரு கணிசமான அளவு பொருட்கள் விவசாயிகளால் நுகரப்படுகின்றன. இவை நாட்டு வருமான கணக்கீட்டில் வருவதில்லை.

கல்வியறிவின்மையின் காரணமாக பல உற்பத்தியாளர்கள் தங்களது உற்பத்தியைப் பற்றி சரியாக கணக்கு வைத்துக் கொள்வதல்லை.

கிராமங்களில் மக்கள் தங்க்ள பணிக்கு தானியமாக.்.பொருட்களாக ஊதியம் பெறுகின்றனர். இவைகளின் பணமதிப்பைக் கணக்கிடுவது கடினமாகும்.

உற்பத்தி மற்றும் வருவாய் பற்றி நம்பத்தகுந்த, சரியான போதுமான புள்ளி விபரங்கள் கிடைப்பதில்லை.

ஒருவர் ஒன்றுக்கு மேற்பட்ட தொழில்கள் செய்யும்போது அவரது வருவாய் அனைத்தையும் கணக்கிட்டு சேர்க்காத நிலை உள்ளது.

வணிகர்கள் உற்பத்தியாளர்கள் தரும் தகவல்கள் உண்மையாக இருப்பதில்லை.

பண்டமாற்று முறையில் மாற்றப்படும் பொருட்கள் நாட்டு வருமான கணக்கெடுப்பில் வருவதில்லை.

**3.இருமுறை கணக்கிடுதல் (Double Counting):**

உற்பத்தி முறையைக் கொண்டு நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது இருமுறை.்.பலமுறை கணக்கிடும் பிரச்சனை உள்ளது. ஏனெனில் ஒரு தொழிற்சாலையின் உற்பத்தி மற்றொரு தொழிற்சாலைக்கு இடுமானமாக.்.கச்சாப் பொருளாக உள்ளது. ஒரு விவசாயி விற்கின்ற

குறிப்பு

பருத்தியின் மதிப்பையும் அந்த பருத்தியால் ஆன துணியை நெசவாலை விற்பதையும் சேர்க்கும்போது நாட்டு வருமானம் அதிகமாக மதிப்பிடப்படுகின்றது. இப்பிரச்சினையைத் தீர்க்க இறுதியாக நுகரப்படும் பணத்தின் மதிப்பை மட்டும் நாட்டு வருமானத்தில் சேர்க்க வேண்டும்.

**4.மாற்றல் வருமானப் பிரச்சினைகள்:**

வருமான கணக்கெடுப்பில் மாற்று வருமானம் ஒரு முக்கிய பிரச்சினையாகும். வருமான முறையில் நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது ஒருவரின் வருவாயில் ஒரு பகுதியை மற்றவருக்கு மாற்றும்போது அந்தத் தொகை இருவரது வருவாயிலும் சேராமல் பாரத்துக் கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக ஒருவரின் ஆண்டு வருமானம் ரூ.1,00,000.∴- அவர் ரூ.2000 அரசிற்கு வருமான வரி செலுத்துகின்றார். இப்போது தனிறபர் வருவாய் ரூ.1,00,000.∴- அரசின் வருவாய் ரூ.2000 என கணக்கிடப்பட்டால் நாட்டு வருமானம் மிகையாக மதிப்பிடப்படலாம். இப்பிரச்சினையைத் தீர்க்க நிகர வருவாய் அல்லது செவிடக்கூடிய வருவாயை மட்டும் வருமானமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

**5.தேய்மானம்:**

நிகர நாட்டு உற்பத்தியை கணக்கிட தேய்மானச் செலவை மொத்த நாட்டு உற்பத்தியிலிருந்து கழிக்க வேண்டும். மூலதனப் பொருட்களின் தேய்மானச் செலவைக் கணக்கிடுவதற்கு சரியான அளவுகோல் இல்லை. அத்துடன் மூலதனப் பொருட்களின் விலைகள் மாறிக்கொண்டே இருப்பதால் தேய்மானச் செலவைக் கணக்கிடுவது கடினமாகும்.

**6.ஊதியமற்ற பணிகள் (பிகுவின் முரண்பாடு):**

மனைவியின் வீட்டுப் பணிகளுக்கு ஊதியத்தை மதிப்பிடுவது கடினமானதாகும். பிகுவின் கருத்துப்படி ஒரு வீட்டுக்காரார் தனது வேலைக்காரியின் பணிகளுக்குத் தரும் ஊதியம் நாட்டு வருமானத்தில் சேருகின்றது. அவர் அந்த வேலைக்காரியை தீர்மானம் செய்து கொள்ளும் போது, அவளது பணிகளுக்கு ஊதியம் தரப்படுவதில்லை. இப்போது நாட்டு வருமானத்தின் அளவு குறைகின்றது.

**7. தவறான வழியில் ஈட்டும் பணம்:**

சூதாட்டம், கள்ளக்கடத்தல், கள்ளச்சந்தை, போன்ற தவறான வழிகளில் பெறும் பணமானது. நாட்டு வருமானக் கணக்கெடுப்பில் சேருவதில்லை.

**8. பணத்தின் மதிப்பு மாறுதல்:**

நாட்டு வருமானமானது பணத்தைக் கொண்டு கணக்கிடப்படுகின்றது. விலைமட்டமானது மாறுவதால் நாட்டு வருமானத்தை இரண்டு காலங்களில் ஒப்பிடுவது தவறானதாகும். விலைக்குறியீட்டெண்ணில் சேரும். பண்டங்கள் நாட்டுக்கு நாடு வேறுபடுவதால் இரு நாடுகளில் நாட்டு வருமனாததை

ஒப்பிடுவது தவறானதாகும். பண வீக்கத்தின் காரணமாக உற்பத்திப் பெருக்கம் இல்லாமல் நாட்டு வருமானத்தின் அளவு அதிகரித்திருக்கலாம். எனவே நாட்டு வருமானத்தை அளவிட பணம் சரியான அளவுகோல் இல்லை.

குறிப்பு

## 2.6. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. தலா வருவாய் என்றால் என்ன?
2. இருமறைக் கணக்கிடுதலைப் பற்றிக் கூறுக.

## 2.7. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** ஒரு நாட்டின் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இருக்கின்ற வருவாயை அந்த நாட்டின் அக்காலத்தின் இருக்கும் மக்கள் தொகையால் வகுத்துப் பெறும் வருவாயை தலா வருவாய் அல்லது சராசரி வருவாய் என்கிறோம்.

**2.** உற்பத்தி முறையைக் கொண்டு நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது இருமுறை.ஃபலமுறை கணக்கிடும் பிரச்சனை உள்ளது. ஏனெனில் ஒரு தொழிற்சாலையின் உற்பத்தி மற்றொரு தொழிற்சாலைக்கு இடுமானமாக.ஃகச்சாப் பொருளாக உள்ளது. ஒரு விவசாயி விற்கின்ற பருத்தியின் மதிப்பையும் அந்த பருத்தியால் ஆன துணியை நெசவாலை விற்பதையும் சேர்க்கும்போது நாட்டு வருமானம் அதிகமாக மதிப்பிடப்படுகின்றது. இப்பிரச்சினையைத் தீர்க்க இறுதியாக நுகரப்படும் பணத்தின் மதிப்பை மட்டும் நாட்டு வருமானத்தில் சேர்க்க வேண்டும்.

## 2.8. சுருக்கம்

தேசிய வருவாய் கணக்கியலில் தேசிய வருவாயைப் பற்றியும் அதனுடைய நிகர உற்பத்தியும் மற்றும் தலா வருவாய் செலவிடத்தக்க வருவாய் பற்றிக் கூறி அதனால் தேசிய வருமானம் தரவு முக்கியத்துவத்தைப் பற்றி சுருக்கமாக விளக்கி அதனால் பின்தங்கிய நாடுகளின் பிரச்சினைகளைக் கூறுகிறது.

## 2.9. முக்கிய வார்த்தைகள்

**செலவிடத்தக்க வருவாய்:** ஒரு மனிதா் பெறுகின்ற வருவாயை எல்லாம் அவா் விருப்பம் போல் செலவிட இயலாது. அவா் பெறுகின்ற வருவாயில் வருமான வரி, சொத்து வரி போன்ற வருவாயை எல்லாம் அவா் விருப்பம் போல் செலவிட இயலாது, அவா் பெறுகின்ற வருவாயில் வருமான வரி, சொத்து வரி, போன்ற வரிகளையும் காப்பீட்டுக்கட்டணம் போன்றவற்றையும் கட்டாயம் கட்டவேண்டியுள்ளது. இவை செலுத்தியது போக எஞ்சும் பணத்தை தான் ஒருவா் சேமிக்கவோ, செலவிடவோ செய்யலாம். இந்தத் தொகை தான் ஒருவரின் உண்மையான வாங்கும் சக்தியை, வாழ்க்கைத்தரத்தைக் காட்டுகின்றது.

**தேசியச் செலவு:**

நாட்டில் நுகர்வுச் செலவும் முதலீட்டுச் செலவும் எப்படி அமைகின்றதென்பதையும் எந்த அளவிற்கு மூலதனக்கழிவுக்கு நிதிஒதுக்க வேண்டுமென்பதையும் வருவாய் விவரங்களிலிருந்து கண்டுகொள்ளலாம்.

குறிப்பு

## 2.10. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

### குறுகிய வினாக்களுக்கு விடையளி.

1.மொத்த தேசிய உற்பத்தி என்றால் என்ன?

2.நிகர தேசிய உற்பத்தி என்றால் என்ன?

### நெடுவினாக்களுக்கு விடையளி.:

1.தேசிய வருமான தரவு முக்கியத்துவத்தை சுருக்கமாகக் கூறுக.

2.நாட்டு வருமானத்தை அளவிடுதலில் உள்ள இடையூறுகளை விளக்குக.

## 2.11. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

அகுஜா, ர்.டு. (2000), ‘‘பேரியல் பொருளாதாரம்’’, ஞ.சாந்த் ரூ கம்பெனி, புது டெல்லி.

# அலகு -3 வேலைக்கோட்பாடு – I

**பாரம்பரிய கோட்பாடுகள் வேலைவாய்ப்பு மற்றும் வருவாய்**

குறிப்பு

**அமைப்பு:**



## 3.1. பாரம்பரிய கோட்பாடுகள் வேலைவாய்ப்பு மற்றும் வருவாய்

'தொன்மை பொருளியலறிஞர்கள்' (Classical Econemists) என்னும் சொற்றொடரைஇ ரிக்கார்டோவையும் ஆடம்ஸ்மித் உட்பட அவரது முன்னோடிகளையும் குறிக்க கார்ல்மார்க்ஸ் பயன்படுத்தினார். ஆனால் கீன்ஸ் தொன்மைப் பொருளியலறிஞர்கள் என்ற சொற்தொடரை ஜேம்ஸ் ஸ்டுவர்ட், மில், ஆல்பிரட் மார்'ல், ஏ.சி. பிகு உட்பட ரிக்கார்டோவை பின்பற்றிய வகையில் பயன்படுத்தினார். பொதுவாக 1776ல் ஆடம்ஸ்மித்தின் 'நாடுகளின் செல்வம் (றுநயடவா ழக யேவழைளெ) நூல் வந்ததிலிருந்து ஏறத்தாழ 50 ஆண்டுகளில் டேவிட் ரிச்சார்டோஇ ஜே எஸ் மில்இ மார்சல்இ ஜீன்பேப்டிஸ்ட்சே ஆகியோர் உருவாக்கிய கோட்பாட்டை தொன்மைப் பொருளியல் கோட்பாடு என்கின்றோம்.

தொன்மைப் பொருளியலறிஞர்கள்இ உழைப்புஇ மூலவளங்களும் எப்பொழுதும் முழுநிறை வேலை நிலையில் இருக்கும்மென்று கருதினர். அவர்கள்இ உற்ப்பத்தி செய்த பொருட்கள் அவைகளே தேவையை உருவாக்கிக் கொள்வதால் மொத்த அளிப்பும் மொத்த தேவையும் சமமாக இருக்குமென்று கருதியதால்இ முழுநிறை வேலைநிலை இருக்குமென்று அவர்கள் கருத்துப்படிஇ குறுகிய காலத்தில் வேண்டுமானால் வேலையின்மை இருக்கலாம். தற்காலிகமாக இருக்கும் வேலையின்மை பிறழ்ச்சி காரணமாகவோஇ தன் விருப்பமானதாகவோ இருக்கும்.

தொன்மைப் பொருளியலஞர்கள் நிறைவுப்போட்டி இருக்குமென்ற எடுகோளின் அடிப்படையில் கீழ்கண்ட மூன்றுவகையான அங்காடிகள் இருக்குமென்று கருதினர்.

குறிப்பு

**உழைப்பு அங்காடி (Labour Market):** தொழிலாளர்கள் தேவை அளிப்பை ஒட்டி உழைப்பு அங்காடி இருக்கும். அதன்படி நிலவும் கூலிவிகிதத்தில் உழைப்பின் தேவையும் அளிப்பும் சமமாக இருக்கும்.

**உற்பத்தி அங்காடி (Product Market):** சேமிப்பும் முதலீடும் உற்ப்பத்தி அங்காடியில் சமமாக இருக்கும். அதாவதுஇ முந்தைய சேமிப்பும் முந்தைய முதலீடும் சமமாக இருக்குமென்று கருதினர்.

**பணஅங்காடி (Money Market):** பணத்தேவையோடு தொடர்புடையது பண அங்காடியாகும். முதலிரண்டும் உண்மையான பொருளாதாரம் தொடர்பானது அவர்கள் பணம்இ வாங்கல் - விற்றல்இ கொடுக்கல் - வாங்கல் ஆகிய பணிகளை மட்டும் செய்வதாகக் கருதியதால் அதற்கு மிகுந்த முக்கியத்துவும் கொடுக்கவில்லை. பண அங்காடி மற்றைய அங்காடியிலிருந்து விலகியிருப்பதாகவும் கருதினர்.

தொன்மை பொருளியறிஞர்கள் விலைகளிலும் கூலிகளிலும் இருக்கும் நெகிழ்ச்சியின் காரணமாக முழுநிறை வேலை நிலை ஏற்படுமென்று நம்பினர். அதாவது மிகை உற்பத்தி காரணமாக மந்த நிலை உருவாகி வேலையின்மை தோன்றினால் விலைகள் குறையும். இதனால் தேவை கூடும். தேவை விலையைத்தூண்ட பொருளாதார நடவடிக்கைகள் பெருக வேலையின்மை மறையும் இதேபோல வேலையின்மையைக் கூலியைக் குறைப்பதன் மூலம் போக்கலாமென்று எண்ணினார். கூலியைக் குறைத்தால் உழைப்பிற்குரிய தேவைகூட பொருளாதார நடவடிக்கைகள் அதிகமாகும். இதனால் வேலையின்மை மறையும்.

டி.ஆர்.மால்தாஸ் சிஸ்மாண்டி (Sismondi)இ கார்ல்மார்க்ஸ் ாப்சன் சில்வியோகேசல் (Silvio-Gesell) போன்றவர்கள் தொன்மைப் பொருளியலறிஞர்கள் கருத்தை சிலவேலைகளில் சாடிய போதிலும் அவர்களால் அதனை முழுவதும் மறுக்க இயலவில்லை. கீன்ஸ்தான் பழைய கருத்தை மறுத்ததோடு புதிய வேலைவாய்ப்புக் கோட்பாட்டையும் உருவாக்கியளித்தார்.

தொன்மைவாதிகளின் கோட்பாட்டின்படி வேலையைத் தேடுபவர்கள் (உழைப்பாளர்கள்), வேலை தருபவர்கள் (உற்பத்தியாளர்கள்) ஆகியோர் ஒன்றுபடும் நிலையில் அல்லது சமநிலையில் வேலைவாய்ப்பு நிர்ணயிக்கப்படுகின்றது. அதாவது உழைப்பின் அளிப்பும், உழைப்பின் தேவையும் வேலையின் அளவை நிர்ணயிக்கின்றன.

**உழைப்பின் அளிப்பு :**

தொன்மைப் பொருளியல் அறிஞர்களின் கருத்துப்படி, கூலி வீதத்திற்கும், உழைப்பின் அளிப்பிற்கும் நேரடியான தொடர்பு உண்டு. கூலியானது தொழிலாளர்களின் பராமரிப்பு மட்டத்தைவிட அதிகரிக்கும் போது

மக்கள்தொகை அதிகரித்து, உழைப்பின் அளிப்பும் அதிகரிக்கின்றது. மாறாக, கூலியானது தொழிலாளர்களின் பராமரிப்பு மட்டத்தைவிட குறைவாக இருக்கும்போது மக்கள்தொகை குறைந்து, உழைப்பின் அளிப்பும் குறைகின்றது.

**உழைப்பின் தேவை :**

உழைப்பின் தேவையானது உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித் திறனைப் பொறுத்ததாகும். தொன்மைவாதிகளின் கருத்துப்படி, கூலி வீதத்திற்கும், உழைப்பின் தேவைக்கும் தலைகீழான தொடர்பு உண்டு. கூலியானது உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித் திறனைவிட குறைவாக இருக்கும்போது உழைப்பின் தேவை கூடும். மாறாக, கூலியானது உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித் திறனைவிட அதிகமாக இருக்கும்போது உழைப்பின் தேவை குறையும்.

ஜான் மேனார்ட் கெயின்ஸியனால் தனது பொதுக் கோட்பாடு வேலைவாய்ப்பு, வட்டி மற்றும் பணம் ஆகியவற்றில் 1936 இல் வெளியிடப்பட்டது, பாரம்பரிய கோட்பாடுகள் மீது ஒரு முன்னணி தாக்குதலை நடத்தியது. அவர் ஒரு புதிய பொருளாதாரத்தை உருவாக்கினார், இது பொருளாதார சிந்தனை மற்றும் கொள்கையில் ஒரு புரட்சியைக் கொண்டுவந்தது.

பொதுக் கோட்பாடு தொன்மை சிந்தனையின் பின்னணிக்கு எதிராக எழுதப்பட்டது. “பாரம்பரிய கலைஞர்கள்” கெய்னீயன் என்பதன் பொருள் “ரிக்கார்டோவைப் பின்பற்றுபவர்கள், அதாவது, ரிக்கார்டியன் பொருளாதாரத்தின் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டு பூரணப்படுத்தியவர்கள்” என்பதாகும். அவர்கள், குறிப்பாக, ஜே.எஸ். மில், மார்‘ல் மற்றும் பிகோ ஆகியோர் ஆவர்.

ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக கட்டமைக்கப்பட்ட மற்றும் பெரும் மந்தநிலைக்கு முன்னும் பின்னும் பொருளாதார சிந்தனை மற்றும் கொள்கையில் ஆதிக்கம் செலுத்திய பாரம்பரிய மற்றும் மரபுவழி பொருளாதாரத்தை கெய்னீயன் நிராகரித்தார். கெய்னீயன் பொருளாதாரம் பாரம்பரிய பொருளாதாரத்தின் விமர்சனத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், வேலைவாய்ப்புக் கோட்பாட்டில் பொதிந்துள்ளதைப் பற்றி அறிந்து கொள்வது அவசியம்.

**உள்ளடக்கம்:**

1. வேலைவாய்ப்பு பற்றிய பாரம்பரிய கோட்பாடு
2. முழுமையான தொன்மை மாதிரி- ஒரு சுருக்கம்
3. பாரம்பரிய கோட்பாட்டின் கெய்னீயன் விமர்சனம்

தொன்மை பொருளாதார வல்லுநர்கள் பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பு இருப்பதை நம்பினர். அவர்களுக்கு, முழு வேலைவாய்ப்பு ஒரு

குறிப்பு

சாதாரண சூழ்நிலை மற்றும் இதிலிருந்து எந்தவொரு விலகலும் அசாதாரணமானதாகக் கருதப்படுகிறது. பிகோவின் கூற்றுப்படி, தொழிலாளர் தேவை மற்றும் வழங்கல் சமமாக இருக்கும்போது தொழிலாளர் சந்தையில் தானாகவே முழு வேலைவாய்ப்பையும் வழங்குவதே பொருளாதார அமைப்பின் போக்கு ஆகும்.

ஊதிய கட்டமைப்பில் உள்ள கடினத்தன்மை மற்றும் தொழிற்சங்க சட்டம், குறைந்தபட்ச ஊதிய சட்டம் போன்ற வடிவங்களில் தடையற்ற சந்தை முறையின் செயல்பாட்டில் தலையிடுவதால் வேலையின்மை விளைகிறது. இயங்கும் ஊதிய விகிதத்தில் வேலை செய்ய விரும்பும் அனைவரும் வேலை செய்ய விரும்பும் போது முழு ஊதியம் வழங்கப்படுகிறது.

தற்போதுள்ள ஊதிய விகிதத்தில் வேலை செய்யத் தயாராக இல்லாதவர்கள் வேலையில்லாமல் இருப்பதால் அவர்கள் தானாக முன்வந்து வேலையில்லாமல் உள்ளனர். ஆகவே முழு வேலைவாய்ப்பு என்பது தற்போதைய ஊதிய விகிதத்தில் மக்கள் வேலை செய்யத் தயாராக இருக்கிறார்கள், ஆனால் அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை என்ற பொருளில் விருப்பமில்லாமல் வேலையின்மை ஏற்பட வாய்ப்பில்லை.

தொன்மைக் கோட்பாட்டின் அடிப்படையானது மார்'ல் மற்றும் பிகோ போன்ற பாரம்பரிய பொருளாதார வல்லுனர்களால் முன்னெடுக்கப்பட்ட சேயின் சந்தை விதி ஆகும். உழைப்பு, பொருட்கள் மற்றும் பணத்திற்கான தனிப்பட்ட சந்தைகளாகப் பிரிக்கப்பட்டுள்ள உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பை நிர்ணயிப்பதை அவர் விளக்கினர். ஒவ்வொரு சந்தையும் பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பை உறுதி செய்வதற்கான ஒரு உள்ளமைக்கப்பட்ட சமநிலை பொறிமுறையை உள்ளடக்கியது.

**கருத்துக்கள்:**

வெளியீடு மற்றும் வேலைவாய்ப்பு பற்றிய பாரம்பரிய கோட்பாடுகள் பின்வரும் அனுமானங்களை அடிப்படையாகக் கொண்டது:

1.பணவீக்கம் இல்லாமல் முழு வேலைவாய்ப்பு உள்ளது.

2.அரசாங்கத்தின் தலையீடு இல்லாமல் ஒரு லாயிஸ்-ஃபைர் முதலாளித்துவ பொருளாதாரம் உள்ளது.

3. இது வெளிநாட்டு வர்த்தகம் இல்லாத மூடிய பொருளாதாரம்.

4. தொழிலாளர் மற்றும் தயாரிப்பு சந்தைகளில் சரியான போட்டி உள்ளது.

5. உழைப்பு ஒரேவிதமானதாகும்.

6. பொருளாதாரத்தின் மொத்த உற்பத்தி நுகர்வு மற்றும் முதலீட்டு செலவினங்களுக்கு இடையில் பிரிக்கப்பட்டுள்ளது.

7. பணத்தின் அளவு வழங்கப்படுகிறது மற்றும் பணம் பரிமாற்ற ஊடகம் மட்டுமே.

8. ஊதியங்கள் மற்றும் விலைகள் முற்றிலும் நெகிழ்வானவை.

9. அனைத்து சந்தை பங்கேற்பாளர்களின் தரப்பிலும் சரியான தகவல்கள் உள்ளன.

10. பண ஊதியங்கள் மற்றும் உண்மையான ஊதியங்கள் நேரடியாக தொடர்புடையவை மற்றும் விகிதாசாரமாகும்.

11. சேமிப்பு தானாகவே முதலீடு செய்யப்படுகிறது மற்றும் இருவருக்கும் இடையிலான சமத்துவம் வட்டி விகிதத்தால் கொண்டு வரப்படுகிறது

12. மூலதன பங்கு மற்றும் தொழில்நுட்ப அறிவு வழங்கப்படுகிறது.

13. வருவாயைக் குறைக்கும் சட்டம் உற்பத்தியில் இயங்குகிறது.

14. இது நீண்ட காலமாக கருதுகிறது.

**விளக்கம்:**

பாரம்பரிய கோட்பாட்டில் வெளியீடு மற்றும் வேலைவாய்ப்பை நிர்ணயிப்பது பொருளாதாரத்தில் தொழிலாளர், பொருட்கள் மற்றும் பணச் சந்தைகளைப் பற்றிக் கூறுகிறது.

**சந்தைகளின் சட்டம்:**

சந்தைகளின் சட்டம் என்பது தொன்மை வேலைவாய்ப்பு கோட்பாட்டின் மையமாகும். 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பிரெஞ்சு பொருளாதார வல்லுனர் ஜே.பி. சே, “வழங்கல் அதன் சொந்த தேவையை உருவாக்குகிறது” என்ற கருத்தை விளக்கினார். எனவே, பொதுவான அதிக உற்பத்தி மற்றும் பொருளாதாரத்தில் வேலையின்மை பிரச்சினை இருக்க முடியாது.

பொருளாதாரத்தில் பொதுவான அதிக உற்பத்தி இருந்தால், சில தொழிலாளர்கள் தங்கள் வேலையை விட்டு வெளியேறும்படி கேட்கப்படலாம். வேலையின்மை பிரச்சினை குறுகிய காலத்தில் பொருளாதாரத்தில் எழுகிறது. நீண்ட காலமாக, பொருட்களின் தேவை மற்றும் வழங்கல் சமமாக மாறும்போது பொருளாதாரம் தானாகவே முழு வேலைவாய்ப்பை நோக்கிச் செல்லும்.

தயாரிப்பாளர் பொருட்களை உற்பத்தி செய்து தொழிலாளர்களுக்கு ஊதியம் வழங்கும்போது, தொழிலாளர்கள் அந்த பொருட்களை சந்தையில் வாங்குகிறார்கள். ஆகவே பொருட்களை வழங்குவதற்கான (உற்பத்தி செய்யும்) செயல் அவற்றுக்கான தேவையைக் குறிக்கிறது. இந்த வழியில் தான் வழங்கல் அதன் சொந்த தேவையை உருவாக்குகிறது.

குறிப்பு

**1.வெளியீடு மற்றும் வேலைவாய்ப்பு தீர்மானித்தல்:**

பாரம்பரிய கோட்பாட்டில், உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பு உற்பத்தி செயல்பாடு மற்றும் உழைப்புக்கான தேவை மற்றும் பொருளாதாரத்தில் தொழிலாளர் வழங்கல் ஆகியவற்றால் தீர்மானிக்கப்படுகிறது. மூலதன பங்கு, தொழில்நுட்ப அறிவு மற்றும் பிற காரணிகளைப் பொறுத்தவரை, மொத்த உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பு அளவு ஆகியவற்றுக்கு இடையே ஒரு துல்லியமான உறவு உள்ளது, அதாவது தொழிலாளர்களின் எண்ணிக்கை. இது பின்வரும் உற்பத்தி செயல்பாட்டின் வடிவத்தில் காட்டப்பட்டுள்ளது: Q = f (K> T> N)

மொத்த வெளியீடு (Q) என்பது மூலதன பங்கு (K), தொழில்நுட்ப அறிவு (T) மற்றும் தொழிலாளர்களின் எண்ணிக்கை (N) ஆகியவற்றின் செயல்பாடு (f) மு மற்றும் வு கொடுக்கப்பட்டால், உற்பத்தி செயல்பாடு ஞ = f (AO) ஆக மாறுகிறது, இது வெளியீடு என்பது தொழிலாளர்களின் எண்ணிக்கையின் செயல்பாடு என்பதைக் காட்டுகிறது. வெளியீடு என்பது தொழிலாளர்களின் எண்ணிக்கையின் அதிகரிக்கும் செயல்பாடு, உழைப்பின் வேலைவாய்ப்பு அதிகரிக்கும் போது வெளியீடு அதிகரிக்கிறது. ஆனால் ஒரு அதிக தொழிலாளர்கள் பணிபுரியும் போது, தொழிலாளர் தொடக்கத்திற்கு ஓரளவு வருமானம் குறைகிறது.




Fig. 1

இது படம் 1 இல் காட்டப்பட்டுள்ளது, அங்கு வளைவு Q = f (N) என்பது உற்பத்தி செயல்பாடு மற்றும் மொத்த வெளியீடு $OQ_1$ KO வேலைவாய்ப்பு நிலை கே உடன் ஒத்திருக்கிறது. ஆனால் வெளியீடு $OQ_1$ இன் KO வேலைவாய்ப்பு மட்டத்திற்கு அப்பால் அதிகமான தொழிலாளர்கள் $NfN_2$ பணியமர்த்தப்படும்போது, $Q_1Q_2$ வெளியீட்டின் அதிகரிப்பு வேலைவாய்ப்பு $N_1N_2$ ஐ விட குறைவாக உள்ளது.

**தொழிலாளர் சந்தை சமநிலை:**

தொழிலாளர் சந்தையில், உழைப்புக்கான தேவை மற்றும் உழைப்பு வழங்கல் ஆகியவை உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பின் அளவை

தீர்மானிக்கின்றன. பாரம்பரிய பொருளாதார வல்லுநர்கள் உழைப்புக்கான தேவையை உண்மையான ஊதிய விகிதத்தின் செயல்பாடாக கருதுகின்றனர்: $D_N$=f(W/P)

$D_N$ = உழைப்புக்கான தேவை, W = ஊதிய விகிதம் மற்றும் P = விலை நிலை. ஊதிய விகிதத்தை (W) விலை நிலை (P) ஆல் வகுத்தால், உண்மையான ஊதிய விகிதத்தை (W / P) பெறுகிறோம்.

உழைப்புக்கான தேவை என்பது உண்மையான ஊதிய விகிதத்தின் குறைந்துவரும் செயல்பாடாகும், இது படம் 2. கீழ்நோக்கி சாய்ந்த னு வளைவால் காட்டப்பட்டுள்ளது. உண்மையான ஊதிய விகிதத்தைக் குறைப்பதன் மூலம் தான் அதிக தொழிலாளர்கள் வேலை செய்ய முடியும்.



Fig. 2

உழைப்பு வழங்கலும் உண்மையான ஊதிய விகிதத்தைப் பொறுத்தது: $S_N$ = f (W / P)> இங்கு $S_N$ என்பது உழைப்பு வழங்கல். ஆனால் இது உண்மையான ஊதிய விகிதத்தின் அதிகரித்து வரும் செயல்பாடாகும், இது படம் 2. மேல்நோக்கி சாய்ந்த $S_N$ வளைவால் காட்டப்பட்டுள்ளது. உண்மையான ஊதிய விகிதத்தை அதிகரிப்பதன் மூலம் தான் அதிக தொழிலாளர்கள் வேலை செய்ய முடியும்.

$D_N$ மற்றும் எஸ்.என் வளைவுகள் புள்ளி E இல் வெட்டும்போது, முழு வேலைவாய்ப்பு நிலை NF சமநிலை உண்மையான ஊதிய விகிதத்தில் W / $P_0$ இல் தீர்மானிக்கப்படுகிறது. ஊதிய விகிதம் $WP_0$ இலிருந்து $WP_1$ ஆக உயர்ந்தால், தொழிலாளர் வழங்கல் அதன் கோரிக்கையை விட அதிகமாக இருக்கும்.

இப்போது W / $P_1$ ஊதிய விகிதத்தில், ளள தொழிலாளர்கள் விருப்பமில்லாமல் வேலையில்லாமல் இருப்பார்கள், ஏனெனில் தொழிலாளர் தேவை (W / $P_1$-d) அவர்களின் விநியோகத்தை விட (W / $P_1$-s) குறைவாக உள்ளது. வேலைக்கான தொழிலாளர்களிடையே போட்டி இருப்பதால்,

குறிப்பு

அவர்கள் குறைந்த ஊதிய விகிதத்தை ஏற்க தயாராக இருப்பார்கள். இதன் விளைவாக, ஊதிய விகிதம் $W / P_1$ இலிருந்து $W / P_0$ ஆக குறையும்.

தொழிலாளர் வழங்கல் வீழ்ச்சியடையும் மற்றும் உழைப்பின் தேவை உயரும் மற்றும் முழு வேலைவாய்ப்பு மட்டத்துடன் சமநிலை புள்ளி நு மீட்டமைக்கப்படும் சே மாறாக, ஊதிய விகிதம் $W / P_0$ இலிருந்து $WP_2$ வரை வீழ்ச்சியடைந்தால் தொழிலாளர் தேவை $(W / P_2\text{-}D_1)$ அதன் விநியோகத்தை விட அதிகமாக இருக்கும் $(W / P_2\text{-}s_1)$. தொழிலாளர்களுக்கான முதலாளிகளின் போட்டி $W / P_2$ இலிருந்து $W / P_0$ ஆக ஊதிய விகிதத்தை உயர்த்தும் மற்றும் முழு வேலைவாய்ப்பு நிலை NF உடன் சமநிலை புள்ளி E மீட்டமைக்கப்படும்.

**ஊதிய விலை வளைந்து கொடுக்கும் தன்மை:**

பாரம்பரிய பொருளாதார வல்லுநர்கள் பொருளாதாரத்தில் எப்போதும் முழு வேலைவாய்ப்பு இருப்பதாக நம்பினர். வேலையின்மை வி'யத்தில், பண ஊதியத்தில் ஒரு பொதுவான வெட்டு பொருளாதாரத்தை முழு வேலைவாய்ப்பு நிலைக்கு கொண்டு செல்லும். இந்த வாதம் பண ஊதியங்களுக்கும் உண்மையான ஊதியங்களுக்கும் நேரடி மற்றும் விகிதாசார உறவு இருக்கிறது என்ற அனுமானத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது.

பண ஊதியங்கள் குறைக்கப்படும்போது, அவை உற்பத்திச் செலவைக் குறைக்க வழிவகுக்கும், இதன் விளைவாக பொருட்களின் விலை குறைகிறது. விலைகள் குறையும் போது, தயாரிப்புகளுக்கான தேவை அதிகரிக்கும் மற்றும் விற்பனை அதிகரிக்கும். அதிகரித்த விற்பனைக்கு அதிக உழைப்பின் வேலைவாய்ப்பு தேவைப்படும், இறுதியில் முழு வேலைவாய்ப்பும் கிடைக்கும்.

பிகு சமன்பாட்டின் முழு முன்மொழிவையும் விளக்குகிறது: $N = qY / W$. இந்த சமன்பாட்டில், N என்பது பணியமர்த்தப்பட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கை, q என்பது ஊதியமாக ஈட்டப்பட்ட வருமானத்தின் ஒரு பகுதி, Y என்பது தேசிய வருமானம் மற்றும் று என்பது பண ஊதிய விகிதம். W இன் குறைப்பால் N I அதிகரிக்க முடியும். இதனால் முழு வேலைவாய்ப்புக்கான திறவுகோல் பண ஊதியத்தைக் குறைப்பதாகும். பண ஊதியத்தைக் குறைப்பதன் மூலம் விலைகள் வீழ்ச்சியடையும் போது, உண்மையான ஊதியமும் அதே விகிதத்தில் குறைக்கப்படுகிறது.

மேலே விளக்கப்பட்டுள்ளபடி, உழைப்புக்கான தேவை உண்மையான ஊதிய விகிதத்தின் குறைந்து வரும் செயல்பாடாகும். W என்பது பண

ஊதிய விகிதம் என்றால், P என்பது உற்பத்தியின் விலை, மற்றும் MPN என்பது உழைப்பின் ஓரளவு தயாரிப்பு என்றால், எங்களிடம் W = P X MPN அல்லது W / P = MPN உள்ளது.

வேலைவாய்ப்பு அதிகரிக்கும் போது ஆீே குறைந்து வருவதால், உண்மையான ஊதியம் (W/P) குறைந்து வருவதால் வேலைவாய்ப்பு அளவு அதிகரிக்கிறது. இது படம் 3 இல் விளக்கப்பட்டுள்ளது. குழு (A) இல், SN என்பது உழைப்பின் விநியோக வளைவு மற்றும் னு என்பது உழைப்புக்கான தேவை வளைவு ஆகும். நு இல் இரண்டு வளைவுகளின் குறுக்குவெட்டு முழு வேலைவாய்ப்பு சே மற்றும் உண்மையான ஊதியம் $W / P_0$ ஆகியவற்றைக் காட்டுகிறது.

உண்மையான ஊதியம் $W / P_1$ ஆக உயர்ந்தால், வழங்கல் என ஆல் தொழிலாளர் தேவையை மீறுகிறது மற்றும் $N_1N_2$ தொழிலாளர்கள் வேலையில்லாமல் உள்ளனர். ஊதியம் $W / P_0$ ஆகக் குறைக்கப்படும்போதுதான் வேலையின்மை மறைந்து முழு வேலைவாய்ப்பின் நிலையை அடைகிறது.



Fig. 3

இது பிரிவு (B) இல் காட்டப்பட்டுள்ளது, அங்கு ஆீே என்பது தொழிலாளர் வளைவின் விளிம்பு உற்பத்தியாகும், இது அதிக உழைப்பு பயன்படுத்தப்படுவதால் கீழ்நோக்கி சரிந்து செல்கிறது. ஒவ்வொரு தொழிலாளிக்கும் அவரது குறு உற்பத்திக்கு சமமான ஊதியம் வழங்கப்படுவதால், ஊதிய விகிதம் $W / P_1$ இலிருந்து $W / P_0$ ஆக குறையும் போது முழு வேலைவாய்ப்பு நிலை சே ஐ அடைகிறது.

மாறாக, $W / P_0$ இலிருந்து $W / P_2$ ஆக ஊதியம் வீழ்ச்சியடைவதால், தொழிலாளர் தேவை அதன் விநியோகத்தை விட s1d1 ஆல் அதிகரிக்கிறது, தொழிலாளர்கள் அதிக ஊதியத்தை கோருகின்றனர். இது $W / P_2$ இலிருந்து $W / P_0$ க்கு ஊதிய உயர்வுக்கு வழிவகுக்கிறது மற்றும் முழு வேலைவாய்ப்பு நிலை NF I அடைகிறது.

குறிப்பு

**பொருட்கள் சந்தை சமநிலை:**

சேமிப்பு முதலீட்டிற்கு சமமாக இருக்கும்போது பொருட்கள் சந்தை சமநிலையில் உள்ளது. அந்த நேரத்தில், மொத்த தேவை மொத்த விநியோகத்திற்கு சமம் மற்றும் பொருளாதாரம் முழு வேலைவாய்ப்பு நிலையில் உள்ளது. தொன்மை கலைஞர்களின் கூற்றுப்படி, செலவிடப்படாதது தானாகவே முதலீடு செய்யப்படுகிறது.

இதனால் சேமிப்பு முதலீட்டிற்கு சமமாக இருக்க வேண்டும். இரண்டிற்கும் இடையில் ஏதேனும் வேறுபாடு இருந்தால், வட்டி விகிதத்தின் பொறிமுறையின் மூலம் சமத்துவம் பராமரிக்கப்படுகிறது. அவர்களுக்கு, சேமிப்பு மற்றும் முதலீடு இரண்டும் வட்டி வீதத்தின் செயல்பாடுகளாகும்.

S = F (R)… (1)

I = F (R)… (2)

S = I

S = சேமிப்பு> I = முதலீடு மற்றும் R = வட்டி விகிதம்.

பாரம்பரிய கலைஞர்களுக்கு, வட்டி என்பது சேமிப்பதற்கான வெகுமதி. அதிக வட்டி விகிதம், அதிக சேமிப்பு மற்றும் முதலீட்டைக் குறைத்தல். மாறாக, குறைந்த வட்டி விகிதம், முதலீட்டு நிதிகளுக்கான தேவை அதிகமாகும், மேலும் சேமிப்பைக் குறைக்கிறது. எந்தவொரு காலகட்டத்திலும், முதலீடு சேமிப்பை விட அதிகமாக இருந்தால், (ஐ , ஞ) வட்டி விகிதம் உயரும்.

முழு வேலைவாய்ப்பு மட்டத்தில் இருவரும் சமமாக இருக்கும் வரை சேமிப்பு அதிகரிக்கும் மற்றும் முதலீடு குறையும். ஏனென்றால், சேமிப்பு என்பது வட்டி வீதத்தின் அதிகரிக்கும் செயல்பாடாகவும், முதலீட்டின் வட்டி வீதத்தின் குறைந்துவரும் செயல்பாடாகவும் கருதப்படுகிறது.

வட்டி விகிதங்கள் முற்றிலும் மீள் தன்மை கொண்டவை என்று கருதினால், சேமிப்புக்கும் முதலீட்டிற்கும் இடையிலான சமத்துவத்தின் வழிமுறை படம் 4 இல் காட்டப்பட்டுள்ளது, அங்கு S சேமிப்பு வளைவு மற்றும் I முதலீட்டு வளைவு. இரண்டுமே E இல் வெட்டுகின்றன, இது முழு வேலைவாய்ப்பு நிலை அல்லது வட்டி விகிதம் S = I. வட்டி விகிதம் அல்லது சேமிப்புக்கு உயர்ந்தால் ஹெக்டேர் முதலீட்டை விட அதிகமாக இருக்கும், இது பொருளாதாரத்தில் வேலையின்மைக்கு வழிவகுக்கும்.

S, ஐ என்பதால், மூலதனத்திற்கான முதலீட்டு தேவை அதன் விநியோகத்தை விட குறைவாக இருப்பதால், வட்டி விகிதம் வீழ்ச்சியடையும் அல்லது, முதலீடு அதிகரிக்கும் மற்றும் சேமிப்பு குறையும். இதன் விளைவாக, S = I சமநிலை E புள்ளியில் மீண்டும் நிறுவப்படும்.

மாறாக, வட்டி விகிதத்தில் R அல்லது $R_2$ முதலீட்டில் வீழ்ச்சி ஊனுயால் சேமிப்பதை விட அதிகமாக இருக்கும் (I > S), மூலதனத்திற்கான தேவை அதன் விநியோகத்தை விட அதிகமாக இருக்கும். வட்டி விகிதம் உயரும், சேமிப்பு அதிகரிக்கும் மற்றும் முதலீடு குறையும். இறுதியில், S = I சமநிலை முழு வேலைவாய்ப்பு மட்டத்தில் மீட்டமைக்கப்படும்.

**பணச் சந்தை சமநிலை:**

பாரம்பரிய கோட்பாட்டில் பணச் சந்தை சமநிலை என்பது பணத்தின் அளவு கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது, இது பொருளாதாரத்தில் பொதுவான விலை நிலை (P) பணம் வழங்கலைப் பொறுத்தது என்று கூறுகிறது (M). சமன்பாடு MV = PT ஆகும், இங்கு M = பண வழங்கல், ஏ = M, P = விலை நிலை மற்றும் T = பரிவர்த்தனை அளவு அல்லது மொத்த வெளியீட்டின் சுழற்சியின் வேகம்.

சமன்பாடு மொத்த பண வழங்கல் ஆஏ பொருளாதாரத்தில் வெளியீட்டு "T யின் மொத்த மதிப்புக்கு சமம் என்று கூறுகிறது. V மற்றும் T நிலையானது என்று கருதி, பணம் (M) வழங்கலில் ஏற்படும் மாற்றம் விலை மட்டத்தில் (P) விகிதாசார மாற்றத்தை ஏற்படுத்துகிறது. இதனால் விலை நிலை என்பது பண விநியோகத்தின் ஒரு செயல்பாடு: P = F (M).

பணத்தின் அளவு, மொத்த வெளியீடு மற்றும் விலை நிலை ஆகியவற்றுக்கு இடையேயான தொடர்பு படம் 5 இல் சித்தரிக்கப்பட்டுள்ளது, அங்கு விலை நிலை கிடைமட்ட அச்சிலும், செங்குத்து அச்சில் மொத்த வெளியீட்டிலும் எடுக்கப்படுகிறது. ஆஏ என்பது ஒரு செவ்வக வளைவு ஆகும். ( பணம் வழங்கல் வளைவு )

ஏனென்றால், இந்த வளைவின் அனைத்து புள்ளிகளிலும் MV = PT சமன்பாடு உள்ளது. வெளியீட்டு நிலை OQ ஐப் பொறுத்தவரை, MV வளைவில் புள்ளி M ஆல் காட்டப்பட்டுள்ளபடி, பணத்தின் அளவோடு ஒரே ஒரு விலை நிலை OP மட்டுமே இருக்கும். பணத்தின் அளவு அதிகரித்தால், ஆஏ வளைவு $ஆ_1$ஏ வளைவாக வலப்புறம் மாறும்.

இதன் விளைவாக, அதே அளவிலான வெளியீடு ழுஞ கொடுக்கப்பட்டால், விலை நிலை OP இலிருந்து OP1 ஆக உயரும். விலை மட்டத்தில் இந்த உயர்வு பணத்தின் அளவு உயர்வுக்கு விகிதாசாரமாகும், அதாவது, வெளியீட்டின் முழு வேலைவாய்ப்பு நிலை OQ Mf இருக்கும்போது $PP_1 = MM_1$.

**2. முழுமையான செம்மொழி மாதிரி - ஒரு சுருக்கம்:**

வேலைவாய்ப்பு பற்றிய பாரம்பரிய கோட்பாடு முழு வேலைவாய்ப்பின் அனுமானத்தின் அடிப்படையில் அமைந்தது, அங்கு முழு வேலைவாய்ப்பு ஒரு

குறிப்பு

சாதாரண சூழ்நிலை மற்றும் இதிலிருந்து எந்தவொரு விலகலும் ஒரு அசாதாரண சூழ்நிலை என்று கருதப்படுகிறது. இது சேயின் சந்தை விதியை அடிப்படையாகக் கொண்டது.

இதன் படி, வழங்கல் அதன் சொந்த தேவையை உருவாக்குகிறது மற்றும் அதிக உற்பத்தி மற்றும் வேலையின்மை பிரச்சினை எழவில்லை. இதனால் பொருளாதாரத்தில் எப்போதும் முழு வேலைவாய்ப்பு உள்ளது. அதிக உற்பத்தி மற்றும் வேலையின்மை இருந்தால், சந்தையில் தேவை மற்றும் விநியோகத்தின் தானியங்கி சக்திகள் முழு வேலைவாய்ப்பு நிலையை மீண்டும் கொண்டு வரும்.

தொன்மைக் கோட்பாட்டில், படம் 6 இல் காட்டப்பட்டுள்ளபடி, உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பு நிர்ணயம் பொருளாதாரத்தின் தொழிலாளர், பொருட்கள் மற்றும் பணச் சந்தைகளில் நடைபெறுகிறது. 6. இந்த சந்தைகளில் தேவை மற்றும் விநியோக சக்திகள் இறுதியில் பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பைக் கொண்டு வரும்.

பாரம்பரிய பகுப்பாய்வில், பொருளாதாரத்தில் வெளியீடு மற்றும் வேலைவாய்ப்பு ஆகியவை மொத்த உற்பத்தி செயல்பாடு, உழைப்புக்கான தேவை மற்றும் உழைப்பு வழங்கல் ஆகியவற்றால் தீர்மானிக்கப்படுகின்றன. மூலதனத்தின் பங்கு, தொழில்நுட்ப அறிவு மற்றும் பிற காரணிகளைப் பொறுத்தவரை, மொத்த உற்பத்திக்கும் வேலைவாய்ப்புக்கும் (தொழிலாளர்களின் எண்ணிக்கை) ஒரு துல்லியமான தொடர்பு உள்ளது.

இது Q = f (K> T> N) ஆக வெளிப்படுத்தப்படுகிறது. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், மொத்த வெளியீடு (Q) என்பது மூலதன பங்கு (K)> தொழில்நுட்ப அறிவு $_T$ மற்றும் தொழிலாளர்களின் எண்ணிக்கை (TV) ஆகியவற்றின் செயல்பாடு (f) ஆகும். K மற்றும் T ஐப் பொறுத்தவரை, மொத்த வெளியீடு (Q) என்பது தொழிலாளர்களின் எண்ணிக்கையின் (N) அதிகரித்து வரும் செயல்பாடாகும்: குழு (ட) இல் காட்டப்பட்டுள்ளபடி Q = f (N). புள்ளி E இல், ழுகே தொழிலாளர்கள் ழுஞ வெளியீட்டை உருவாக்குகிறார்கள். ஆனால் புள்ளி E க்கு அப்பால், அதிகமான தொழிலாளர்கள் பணியாற்றுவதால், குறைந்த வருமானம் குறைகிறது.

**தொழிலாளர் சந்தை சமநிலை:**

தொழிலாளர் சந்தையில், தொழிலாளர் தேவை மற்றும் வழங்கல் பொருளாதாரத்தில் உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பை தீர்மானிக்கிறது. உழைப்புக்கான தேவை மொத்த உற்பத்தியைப் பொறுத்தது. உற்பத்தி அதிகரிக்கும் போது, உழைப்புக்கான தேவையும் அதிகரிக்கிறது.

தொழிலாளர் தேவை, இதையொட்டி, உழைப்பின் ஓரளவு உற்பத்தித்திறனை (M̃) சார்ந்துள்ளது, இது அதிக தொழிலாளர்கள்

பணியாற்றுவதால் குறைகிறது. உழைப்பு வழங்கல் ஊதிய விகிதமான SL = f (W / P) ஐப் பொறுத்தது, இது ஊதிய விகிதத்தின் அதிகரிக்கும் செயல்பாடாகும்.

உழைப்புக்கான தேவை ஊதிய விகிதமான DL = f (W / P) ஐப் பொறுத்தது, இது ஊதிய விகிதத்தின் குறைந்துவரும் செயல்பாடாகும். ஆகவே உழைப்புக்கான தேவை மற்றும் வழங்கல் இரண்டும் உண்மையான ஊதிய விகிதத்தின் (W / P) செயல்பாடுகளாகும். புள்ளிவிவரத்தின் குழு (ஊ) இல் W / P ஊதிய விகிதத்தில் டி.எல் மற்றும் SL; வளைவுகளின் குறுக்குவெட்டு புள்ளி முழு வேலைவாய்ப்பு அளவை ழுகே தீர்மானிக்கிறது.

**பொருட்கள் சந்தை சமநிலை:**

பாரம்பரிய பகுப்பாய்வில், சேமிப்பு மற்றும் முதலீடு சமநிலையில் இருக்கும்போது (S = I) பொருட்கள் சந்தை சமநிலையில் இருக்கும். இந்த சமத்துவம் முழு வேலைவாய்ப்பு மட்டத்தில் வட்டி விகிதத்தின் பொறிமுறையால் கொண்டுவரப்படுகிறது, இதனால் கோரப்பட்ட பொருட்களின் அளவு வழங்கப்பட்ட பொருட்களின் அளவிற்கு சமமாக இருக்கும். இது வட்டி விகிதம் அல்லது போது E = புள்ளியில் ளு = I இருக்கும் நபரின் குழு (A) இல் காட்டப்பட்டுள்ளது.

**பணச் சந்தை சமநிலை:**

பணத்திற்கான தேவை பண விநியோகத்திற்கு சமமாக இருக்கும்போது பணச் சந்தை சமநிலையில் உள்ளது. பணத்தின் அளவு கோட்பாடு இதை விளக்குகிறது, இது பணத்தின் அளவு விலை மட்டத்தின் செயல்பாடு> P = f (MV) என்று கூறுகிறது. பொது விலை மட்டத்தில் ஏற்படும் மாற்றங்கள் பணத்தின் அளவிற்கு விகிதாசாரமாகும்.

பணச் சந்தையில் சமநிலை MV = PT என்ற சமன்பாட்டால் காட்டப்படுகிறது, அங்கு ஆஏ என்பது பண வழங்கல் மற்றும் PT என்பது பணத்திற்கான தேவை. பணச் சந்தையின் சமநிலை வரைபடம் (Es) மற்றும் வரைபடம் (P) ஆகியவற்றை ஆஞ வரியுடன் தொடர்புபடுத்தும் வெளியீட்டின் முழு வேலைவாய்ப்பு நிலைக்கு ஒத்த விலை அளவை விளக்குகிறது.

வரைபடம் (நு) இல் காட்டப்பட்டுள்ளபடி, விலை நிலை OP மொத்த வெளியீடு (Q) மற்றும் பணத்தின் அளவு (MV) ஆகியவற்றால் தீர்மானிக்கப்படுகிறது. குழு (B) இல் காட்டப்பட்டுள்ளபடி, பண ஊதியத்துடன் தொடர்புடைய உண்மையான ஊதியம் (W / P) வளைவால் தீர்மானிக்கப்படுகிறது.

ஊதியம் அதிகரிக்கும் போது, உண்மையான ஊதியமும் அதே விகிதத்தில் அதிகரிக்கிறது மற்றும் உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பு

குறிப்பு

மட்டத்தில் எந்த விளைவும் இல்லை. பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பு நிலையை அடைவதற்கு பண ஊதியம் குறைக்கப்பட வேண்டும் என்று அது பின்வருமாறு கூறுகிறது. இதனால் பாரம்பரிய கலைஞர்கள் முழு வேலைவாய்ப்பையும் பராமரிக்க ஒரு நெகிழ்வான விலை-ஊதியக் கொள்கையை ஆதரித்தனர்.

**3. தொன்மை கோட்பாட்டின் கெய்னீயன் விமர்சனம்:**

வேலைவாய்ப்பு பற்றிய பாரம்பரிய கோட்பாட்டை தனது பொதுக் கோட்பாட்டில் நம்பத்தகாத அனுமானங்களுக்காக கெய்னீயன் கடுமையாக விமர்சித்தார்.

அவர் பாரம்பரிய கோட்பாட்டை பின்வரும் எண்ணிக்கையில் தாக்கினார்:

**(1) வேலையின்மை சமநிலை:**

பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பு சமநிலையின் அடிப்படை பாரம்பரிய அனுமானத்தை கெய்னீயன் நிராகரித்தார். அவர் அதை நம்பத்தகாததாக கருதினார். முழு வேலைவாய்ப்பையும் ஒரு சிறப்பு சூழ்நிலையாக அவர் கருதினார். ஒரு முதலாளித்துவ பொருளாதாரத்தின் பொதுவான நிலைமை வேலையின்மை ஒன்றாகும்.

ஏனென்றால், முதலாளித்துவ சமூகம் சேயின் சட்டத்தின்படி செயல்படாது, மற்றும் வழங்கல் எப்போதும் அதன் தேவையை மீறுகிறது. மில்லியன் கணக்கான தொழிலாளர்கள் தற்போதைய ஊதிய விகிதத்தில் வேலை செய்யத் தயாராக இருப்பதையும், அதற்குக் கீழே கூட இருப்பதையும் நாங்கள் காண்கிறோம், ஆனால் அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை.

ஆகவே முதலாளித்துவ பொருளாதாரங்களில் தன்னிச்சையான வேலையின்மை இருப்பது (பாரம்பரிய கலைஞர்களால் முற்றிலுமாக ஆளப்படுகிறது) வேலையின்மை சமநிலை என்பது ஒரு சாதாரண நிலைமை மற்றும் முழு வேலைவாய்ப்பு சமநிலை அசாதாரணமானது மற்றும் தற்செயலானது என்பதை நிரூபிக்கிறது.

**(2) சொல் சட்டத்தை மறுத்தல்:**

வழங்கல் எப்போதுமே அதன் சொந்த தேவையை உருவாக்கும் சந்தைகளின் சட்டத்தை கெய்னீயன் மறுத்தார். காரணி உரிமையாளர்களால் சம்பாதிக்கப்பட்ட அனைத்து வருமானங்களும் அவர்கள் உற்பத்தி செய்ய உதவிய தயாரிப்புகளை வாங்குவதற்கு செலவிடப்படாது என்று அவர் கூறினார்.

சம்பாதித்த வருமானத்தின் ஒரு பகுதி சேமிக்கப்படுகிறது மற்றும் தானாக முதலீடு செய்யப்படுவதில்லை, ஏனெனில் சேமிப்பு மற்றும் முதலீடு தனித்துவமான செயல்பாடுகள். எனவே சம்பாதித்த வருமானங்கள் அனைத்தும் நுகர்வுப் பொருட்களுக்கு செலவிடப்படாமலும், அதன் ஒரு பகுதியும் சேமிக்கப்படும்போது, மொத்த தேவையின் குறைபாடு ஏற்படுகிறது.

குறிப்பு

இது பொதுவான அதிக உற்பத்திக்கு வழிவகுக்கிறது, ஏனெனில் உற்பத்தி செய்யப்படும் அனைத்தும் விற்கப்படவில்லை. இது பொதுவான வேலையின்மைக்கு வழிவகுக்கிறது. இதனால் கெய்னீயன் Nr தனது சட்டத்தை நிராகரித்தார், அது வழங்கல் அதன் சொந்த கோரிக்கையை உருவாக்கியது. அதற்கு பதிலாக அவர் கோரிக்கையை வழங்குவதை உருவாக்கினார் என்று வாதிட்டார். ஒட்டுமொத்த தேவை அதிகரிக்கும் போது, அந்த கோரிக்கையை பூர்த்தி செய்ய, நிறுவனங்கள் அதிகமாக உற்பத்தி செய்கின்றன, மேலும் அதிகமானவர்களை வேலைக்கு அமர்த்துகின்றன.

**(3) சுய சரிசெய்தல் சாத்தியமில்லை:**

முழு வேலைவாய்ப்பு சமநிலையின் தானியங்கி மற்றும் சுய-சரிசெய்தல் செயல்முறைக்கு லைசெஸ்-ஃபைர் கொள்கை அவசியம் என்ற பாரம்பரிய பார்வையுடன் கெய்ன்ஸ் உடன்படவில்லை. முதலாளித்துவ அமைப்பு தன்னுடைய சமுதாயத்தின் சமத்துவமற்ற கட்டமைப்பால் தானாகவும் சுயமாகவும் சரிசெய்யப்படவில்லை என்று அவர் சுட்டிக்காட்டினார். பணக்காரர் மற்றும் ஏழைகள் என இரண்டு முதன்மை வகுப்புகள் உள்ளன.

பணக்காரர்கள் அதிக செல்வத்தை வைத்திருக்கிறார்கள், ஆனால் அவர்கள் அதை முழுவதுமாக நுகர்வுக்காக செலவிடுவதில்லை. ஏழைகளுக்கு நுகர்வு பொருட்களை வாங்க பணம் இல்லை. ஆகவே ஒட்டுமொத்த விநியோகத்துடன் ஒட்டுமொத்த தேவையின் பொதுவான குறைபாடு உள்ளது, இது பொருளாதாரத்தில் அதிக உற்பத்தி மற்றும் வேலையின்மைக்கு வழிவகுக்கிறது. இது உண்மையில் பெரும் மந்தநிலைக்கு வழிவகுத்தது.

முதலாளித்துவ அமைப்பு தானியங்கி மற்றும் சுய சரிசெய்தல் இருந்திருந்தால், இது நிகழ்ந்திருக்காது. எனவே, நிதி மற்றும் நாணய நடவடிக்கைகள் மூலம் பொருளாதாரத்திற்குள் வழங்கல் மற்றும் தேவையை சரிசெய்ய அரசு தலையீட்டை கெய்ன்ஸ் ஆதரித்தார்.

**(4) வருமான மாற்றங்கள் மூலம் சேமிப்பு மற்றும் முதலீட்டின் சமத்துவம்:**

முழுமையான வேலைவாய்ப்பு மட்டத்தில் சேமிப்பு மற்றும் முதலீடு சமம் என்று பாரம்பரிய கலைஞர்கள் நம்பினர், ஏதேனும் வேறுபாடு ஏற்பட்டால் வட்டி விகிதத்தின் பொறிமுறையால் சமத்துவம் கொண்டு வரப்பட்டது. சேமிப்பு நிலை வருமான அளவைப் பொறுத்தது, வட்டி விகிதத்தை சார்ந்தது அல்ல என்று கெய்னீயன் கூறினார்.

இதேபோல் முதலீடு வட்டி விகிதத்தால் மட்டுமல்ல, மூலதனத்தின் ஓரளவு செயல்திறனாலும் தீர்மானிக்கப்படுகிறது. வணிக எதிர்பார்ப்புகள் குறைவாக இருந்தால் குறைந்த வட்டி விகிதம் முதலீட்டை அதிகரிக்க முடியாது. சேமிப்பு முதலீட்டை விட அதிகமாக இருந்தால், மக்கள் நுகர்வுக்கு குறைவாகவே செலவிடுகிறார்கள் என்று அர்த்தம்.

குறிப்பு

இதன் விளைவாக, தேவை குறைகிறது. முதலீடு, வருமானம், வேலைவாய்ப்பு மற்றும் உற்பத்தி ஆகியவற்றில் அதிக உற்பத்தி மற்றும் வீழ்ச்சி உள்ளது. இது சேமிப்பைக் குறைக்க வழிவகுக்கும், இறுதியில் சேமிப்புக்கும் முதலீட்டிற்கும் இடையிலான சமத்துவம் குறைந்த வருமானத்தில் எட்டப்படும். ஆகவே இது வட்டி விகிதத்தை விட வருமானத்தில் உள்ள மாறுபாடுகள் ஆகும், இது சேமிப்புக்கும் முதலீட்டிற்கும் இடையிலான சமத்துவத்தைக் கொண்டுவருகிறது.

**(5) பணத்திற்கான ஊக தேவைகளின் முக்கியத்துவம்:**

பாரம்பரிய பொருளாதார வல்லுநர்கள் பரிவர்த்தனைகள் மற்றும் முன்னெச்சரிக்கை நோக்கங்களுக்காக பணம் கோரப்படுவதாக நம்பினர். பணத்திற்கான ஏகப்பட்ட கோரிக்கையை அவர்கள் அங்கீகரிக்கவில்லை. ஏனெனில் செயலற்ற நிலுவைகள் தொடர்பான ஊக நோக்கங்களுக்காக பணம் வைத்திருந்தது.

ஆனால் கெய்னீயன் இந்த கருத்தை ஏற்கவில்லை. பணத்திற்கான ஏக கோரிக்கையின் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார். பரிவர்த்தனைகள் மற்றும் முன்னெச்சரிக்கை நோக்கங்களுக்காகக் கருதப்படும் சொத்துகளிலிருந்து வட்டி சம்பாதிப்பது குறைந்த வட்டி விகிதத்தில் மிகக் குறைவாக இருக்கலாம் என்று அவர் சுட்டிக்காட்டினார்.

ஆனால் பணத்திற்கான ஏகப்பட்ட தேவை குறைந்த வட்டி விகிதத்தில் எல்லையற்றதாக இருக்கும். இதனால் வட்டி விகிதம் ஒரு குறிப்பிட்ட குறைந்தபட்ச மட்டத்திற்கு கீழே வராது, மேலும் பணத்திற்கான ஊக தேவை முற்றிலும் வட்டி மீள் ஆக மாறும். பாரம்பரிய கலைஞர்கள் பகுப்பாய்வு செய்யத் தவறிய கெய்னீயன் ஷபணப்புழக்க பொறி’ இது.

**(6) பணத்தின் அளவு கோட்பாட்டை நிராகரித்தல்:**

பணம் வழங்கல் அதிகரிப்பு என்பது விலைவாசி உயர்வுக்கு அவசியமில்லை என்ற அடிப்படையில் கெய்னீயன் பணத்தின் பாரம்பரிய அளவு கோட்பாட்டை நிராகரித்தார். மக்கள் கூடுதல் பணத்தை செலவழிக்க வேண்டியது அவசியமில்லை. அவர்கள் அதை வங்கியில் டெபாசிட் செய்யலாம் அல்லது சேமிக்கலாம்.

எனவே பணத்தின் புழக்கத்தின் வேகம் (V) மெதுவாக இருக்கலாம் மற்றும் மாறாமல் இருக்கலாம். இதனால் $MV = PT$ சமன்பாட்டில் V மாறுபடலாம். மேலும், பண விநியோகத்தில் அதிகரிப்பு, பொருளாதாரத்தில் செயலற்ற வளங்கள் இருந்தால் முதலீடு, வேலைவாய்ப்பு மற்றும் உற்பத்தி அதிகரிக்கும் மற்றும் விலை நிலை (P) பாதிக்கப்படாமல் போகலாம்.

குறிப்பு

**(7) பணம் நடுநிலையானது:**

பாரம்பரிய பொருளாதார வல்லுநர்கள் பணத்தை நடுநிலையாகக் கருதினர். எனவே, அவர்கள் வெளியீடு, வேலைவாய்ப்பு மற்றும் வட்டி வீதக் கோட்பாட்டை நாணயக் கோட்பாட்டிலிருந்து விலக்கினர். அவர்களைப் பொறுத்தவரை, உற்பத்தி மற்றும் வேலைவாய்ப்பு நிலை மற்றும் சமநிலை வட்டி விகிதம் ஆகியவை உண்மையான சக்திகளால் தீர்மானிக்கப்படுகின்றன.

பணவியல் கோட்பாடு மதிப்புக் கோட்பாட்டிலிருந்து தனி என்ற கிளாசிக்கல் பார்வையை கெய்னீயன் விமர்சித்தார். அவர் பணக் கோட்பாட்டை மதிப்புக் கோட்பாட்டுடன் ஒருங்கிணைத்தார். மேலும் வட்டி விகிதத்தை ஒரு பண நிகழ்வாகக் கருதி நாணயக் கோட்பாட்டின் களத்தில் ஆர்வக் கோட்பாட்டைக் கொண்டுவந்தார். வெளியீட்டுக் கோட்பாட்டின் மூலம் மதிப்புக் கோட்பாட்டையும் பணவியல் கோட்பாட்டையும் ஒருங்கிணைத்தார்.

வட்டி வீதத்தின் மூலம் பணத்தின் அளவிற்கும் விலை அளவிற்கும் இடையே ஒரு இணைப்பை உருவாக்குவதன் மூலம் அவர் இதைச் செய்தார். உதாரணமாக, பணத்தின் அளவு அதிகரிக்கும் போது, வட்டி விகிதம் குறைகிறது, முதலீடு அதிகரிக்கிறது, வருமானம் மற்றும் உற்பத்தி அதிகரிப்பு, தேவை அதிகரிக்கிறது, காரணி செலவுகள் மற்றும் ஊதியங்கள் அதிகரிக்கின்றன, உறவினர் விலைகள் அதிகரிக்கின்றன, இறுதியில் பொதுவான விலை நிலை உயர்கிறது. இதனால் கெய்னீயன் பொருளாதாரத்தின் நாணய மற்றும் உண்மையான துறைகளை ஒருங்கிணைத்தார்.

**(8) ஊதியக் குறைப்பை மறுத்தல்:**

பண ஊதியக் குறைப்பு பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பையும் அடையக்கூடும் என்ற பிகோவியன் சூத்திரத்தை கெய்னீயன் மறுத்தார். பிகோவின் பகுப்பாய்வில் மிகப் பெரிய பொய் என்னவென்றால், அவர் ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கு பொருந்தக்கூடிய பொருளாதாரத்திற்கு வாதத்தை விரிவுபடுத்தினார்.

ஊதிய விகிதத்தைக் குறைப்பதன் மூலம் செலவுகளைக் குறைப்பதன் மூலமும் தேவையை அதிகரிப்பதன் மூலமும் ஒரு தொழிலில் வேலைவாய்ப்பு அதிகரிக்கும். ஆனால் பொருளாதாரத்திற்காக இத்தகைய கொள்கையை பின்பற்றுவது வேலைவாய்ப்பைக் குறைக்க வழிவகுக்கிறது. பொது ஊதியக் குறைப்பு இருக்கும்போது, தொழிலாளர்களின் வருமானம் குறைகிறது. இதன் விளைவாக, மொத்த தேவை வேலைவாய்ப்பு வீழ்ச்சிக்கு வழிவகுக்கிறது.

நடைமுறைக் கண்ணோட்டத்தில், கெய்னீயன் ஒருபோதும் ஊதியக் குறைப்பு கொள்கையை ஆதரிக்கவில்லை. நவீன காலங்களில், தொழிலாளர்கள் வலுவான தொழிற்சங்கங்களை உருவாக்கியுள்ளனர், அவை பண ஊதியத்தை குறைப்பதை எதிர்க்கின்றன. அவர்கள் வேலைநிறுத்தங்களை

குறிப்பு

நாடுவார்கள். இதன் விளைவாக பொருளாதாரத்தில் அமைதியின்மை உற்பத்தி மற்றும் வருமானத்தில் சரிவைக் கொண்டுவரும். மேலும், இலாபங்களைத் தீண்டாமல் விட்டால் ஊதியங்களைக் குறைக்கக் கூடாது என்று சமூக நீதி கோருகிறது.

**(9) பணம் மற்றும் உண்மையான ஊதியங்களுக்கு இடையே நேரடி மற்றும் விகிதாசார தொடர்பு இல்லை:**

பண ஊதியங்களுக்கும் உண்மையான ஊதியங்களுக்கும் இடையே நேரடி மற்றும் விகிதாசார உறவு இருப்பதாக கிளாசிக்கல் பார்வையை கெய்ன்ஸ் ஏற்கவில்லை. அவரைப் பொறுத்தவரை, இருவருக்கும் இடையே ஒரு தலைகீழ் உறவு உள்ளது. பண ஊதியங்கள் குறையும் போது, உண்மையான ஊதியங்கள் உயரும், நேர்மாறாகவும் இருக்கும்.

எனவே, பண ஊதியத்தில் குறைப்பு உண்மையான ஊதியத்தை குறைக்காது, பாரம்பரிய கலைஞர்கள் நம்பியபடி, அது அதிகரிக்கும். ஏனென்றால், பண ஊதியக் குறைப்பு உற்பத்தி செலவு மற்றும் விலையை முந்தியதை விடக் குறைக்கும்.

இதனால் உண்மையான ஊதியங்கள் வீழ்ச்சியடையும் என்ற பாரம்பரிய பார்வை வேலைவாய்ப்பு முறிவை அதிகரிக்கும். எவ்வாறாயினும், பண ஊதியத்தைக் குறைப்பதன் மூலம் பணவியல் மற்றும் நிதி நடவடிக்கைகள் மூலம் வேலைவாய்ப்பை எளிதாக அதிகரிக்க முடியும் என்று கெய்னீயன் நம்பினார். மேலும், ஊதியம் மற்றும் விலைக் குறைப்புகளுக்கு நிறுவன ரீதியான எதிர்ப்புகள் மிகவும் வலுவானவை, அத்தகைய கொள்கையை நிர்வாக ரீதியாக செயல்படுத்த முடியாது.

**(10) மாநில தலையீடு அவசியம்:**

“எங்கள் உற்பத்தி சக்தியை முழுமையாகப் பயன்படுத்தத் தவறியதற்கு உராய்வு குறைபாடுகள் மட்டுமே காரணம்” என்று கெய்னீயன் பிகோவுடன் உடன்படவில்லை. முதலாளித்துவ அமைப்பு என்பது தனக்குத்தானே விட்டுச்செல்லும், அது உற்பத்தியை சக்திவாய்ந்த முறையில் பயன்படுத்த இயலாது. எனவே, மாநில தலையீடு அவசியம்.

பொருளாதார நடவடிக்கைகளின் அளவை உயர்த்த அல்லது தனியார் முதலீட்டிற்கு கூடுதலாக அரசு நேரடியாக முதலீடு செய்யலாம். இது தொழிற்சங்கங்களை அங்கீகரித்தல், குறைந்தபட்ச ஊதியங்களை நிர்ணயித்தல் மற்றும் சமூக பாதுகாப்பு நடவடிக்கைகள் மூலம் தொழிலாளர்களுக்கு நிவாரணம் வழங்குவதற்கான சட்டத்தை நிறைவேற்றலாம்.

எனவே, டில்லார்ட் கவனித்தபடி, “தொழிலாளர் தொழிற்சங்கங்கள் மற்றும் தாராளவாத தொழிலாளர் சட்டத்தை எதிர்ப்பது நல்ல பொருளாதாரமாகக் கருதப்பட்டாலும் அது மோசமான அரசியல்.” ஆகவே,

குறிப்பு

பொருளாதாரத்தின் வளங்களை முழுமையாகப் பெறுவதற்கு கெய்னிசியன் அரசு நடவடிக்கைக்கு ஆதரவளித்தார்.

**(11) நீண்டகால பகுப்பாய்வு நம்பத்தகாதது:**

பாரம்பரிய கலைஞர்கள் ஒரு சுய சரிசெய்தல் செயல்முறை மூலம் நீண்டகால முழு வேலைவாய்ப்பு சமநிலையை நம்பினர். 'நீண்ட காலமாக நாம் அனைவரும் இறந்துவிட்டோம்' என்று நம்பியதற்காக கெய்ன்ஸுக்கு நீண்ட காலம் காத்திருக்க பொறுமை இல்லை.

ஷும்பீட்டர் சுட்டிக்காட்டியபடி, "அவரது வாழ்க்கை தத்துவம் அடிப்படையில் ஒரு குறுகிய கால தத்துவமாகும்." அவரது பகுப்பாய்வு குறுகிய கால நிகழ்வுகளுடன் மட்டுப்படுத்தப்பட்டுள்ளது. தொன்மைக் கலைஞர்களைப் போலல்லாமல், சுவை, பழக்கம், உற்பத்தி நுட்பங்கள், உழைப்பு வழங்கல் போன்றவை குறுகிய காலத்தில் நிலையானதாக இருக்கும் என்று அவர் கருதுகிறார், எனவே தேவைக்கு நீண்டகால தாக்கங்களை புறக்கணிக்கிறார்.

நுகர்வு தேவை நிலையானது என்று கருதி, வேலையின்மையை அகற்ற முதலீட்டை அதிகரிப்பதில் அவர் முக்கியத்துவம் கொடுக்கிறார். ஆனால் எட்டப்பட்ட சமநிலை நிலை முழு வேலைவாய்ப்பைக் காட்டிலும் வேலையின்மையில் ஒன்றாகும். ஆகவே வேலைவாய்ப்பு பற்றிய தொன்மைக் கோட்பாடு நம்பத்தகாதது மற்றும் முதலாளித்துவ உலகின் இன்றைய பொருளாதார பிரச்சினைகளை தீர்க்க இயலாது.

## 3.2. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. உழைப்பு அங்காடி என்றால் என்ன?
2. பாரம்பரியக் கோட்பாட்டைப் பற்றிக் கூறுக.

## 3.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. தொழிலாளர்கள் தேவை அளிப்பை ஒட்டி உழைப்பு அங்காடி இருக்கும். அதன்படி நிலவும் கூலிவிகிதத்தில் உழைப்பின் தேவையும் அளிப்பும் சமமாக இருக்கும்.
2. பாரம்பரிய கோட்பாட்டில் வெளியீடு மற்றும் வேலைவாய்ப்பை நிர்ணயிப்பது பொருளாதாரத்தில் தொழிலாளர், பொருட்கள் மற்றும் பணச் சந்தைகளைப் பற்றிக் கூறுகிறது.

## 3.4. சுருக்கம்

பாரம்பரியக் கோட்பாடுகள் வேலைவாய்ப்பு மற்றும் வருவாயை உள்ளடக்கி அதனுடைய உழைப்பின் அளிப்பு மற்றும் உழைப்பின் தேவையைப் பற்றியும் வேலைவாய்ப்பினை தீர்மானித்தலைப் பற்றி ஆராய்ந்து தொழிலாளர் சந்தை சமநிலை மற்றும் பணச் சந்தைச் சமநிலை அதனால் பணத்திற்கான ஊகத் தேவை முக்கியத்துவத்தைப் பற்றி ஆராய்ந்து அதனால் ஊதியக் குறைப்பை மறுத்தலைப் பற்றித் தெளிவாகக் கூறுகிறது.

குறிப்பு

## 3.5. முக்கிய வார்த்தைகள்

**உற்பத்தி அங்காடி:** சேமிப்பும் முதலீடும் உற்ப்பத்தி அங்காடியில் சமமாக இருக்கும். அதாவதுஇ முந்தைய சேமிப்பும் முந்தைய முதலீடும் சமமாக இருக்குமென்று கருதினர்.

**வேலையின்மைச் சமநிலை:** வேலையின்மை சமநிலை என்பது ஒரு சாதாரண நிலைமை மற்றும் முழு வேலைவாய்ப்பு சமநிலை அசாதாரணமானது மற்றும் தற்செயலானது என்பதை நிரூபிக்கிறது.

## 3.6. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

### குறுகிய வினாக்கள்:

1. பண அங்காடி என்றால் என்ன?
2. முழு வேலைவாய்ப்பில் தொன்மைப் பொருளாதார வல்லுநர்களின் கூற்றைக் கூறுக.

### நெடு வினாக்கள்:

1. பாரம்பரிய கோட்பாட்டிலுள்ள அனுமானங்களை விளக்குக.
2. தொன்மைக் கோட்பாட்டில் கீன்ஸின் கருத்தை விளக்குக.

## 3.7. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

1. வைʻ, ஆ.ஊ. (2005), ‘‘பேரியல் பொருளாதாரக் கொள்கை’’, விகாஸ் பப்ளிங் ஹவுஸ், புது டெல்லி.

# அலகு – 4 வேலை கோட்பாடு – II

குறிப்பு

**அமைப்பு:**

**4.1. சேயின் சந்தை விதி**

**4.2. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்**

**4.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்**

**4.4. சுருக்கம்**

**4.5. முக்கிய வார்த்தைகள்**

**4.6. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்**

**4.7. பரிந்துரைக்கப்படும் நூல்கள்**

## 4.1. சேயின் சந்தை விதி (Say's Law of Markets)

பொருளாதாரத்தில் எப்போதும் சாதனங்கள் முழுவேலை நிலையில் இருக்கும் என்ற தொன்மைப் பொருளியல் அறிஞர்களின் கருத்து சேயின் அங்காடி விதியின் அடிப்படையில் அமைந்துள்ளது. தொன்மைவாதிகளின் வேலைக்கோட்பாட்டின் மையமாக விளங்குவது சேயின் அங்காடி விதியாகும். ஸ்ரீஅளிப்பு அதனுடைய தேவையை உருவாக்குகிறது' என்பது து.டீ. சே அவர்களின் அங்காடி விதியாகும். அதாவது உற்பத்தியே பண்டங்களுக்கு அங்காடியை உருவாக்கி விடும். சேயின் அங்காடி விதிப்படி, ஒவ்வொரு உற்பத்தியும் அதே அளவு வருமானத்தை (வாரம், கூலி, வட்டி, இலாபம்) உருவாக்குகிறது. எனவே உற்பத்தியின் மதிப்பிற்கு சமமான வாங்கும் சக்தியும் பொருளாதாரத்தில் புகுத்தப்படுகினறது. இந்த வாங்கும் சக்தியைக் கொண்டு அப்பண்டம் முழுவதும் வாங்கப்படுவதால் உற்பத்தியாகின்ற பண்டங்கள் எல்லாம் விற்பனையாகின்றது.

**(a)எடுகோள்கள் :**

சேயின் அங்காடி விதி பின்வரும் எடுகோள்களின் அடிப்படையில் அமைந்துள்ளது.

அரசின் தலையீடு இல்லை.

அங்காடிப் பொருளாதாரத்தில் விலை என்ற கருவியானது மக்கட்தொகைப் பெருக்கத்தையும், முதலாக்கத்தையும் தூண்டுகிறது.

அங்காடியின் அளவு விரிவடையும் தன்மையுடையது.

வட்டிவீத நெகிழ்ச்சியினால் சேமிப்பும், முதலீடும் சமநிலையில் இருக்கும்.

குறிப்பு

பிறநாடுகளுடன் வணிகத் தொடர்பில்லை (மூடிய பொருளாதாரம்) வருமானம் அனைத்தும் செலவிடப்படுகின்றது. (பதுக்குதல் இல்லை)பணம் இடையீட்டுக் கருவியாக மட்டும் செயல்படுகின்றது.

அங்காடியில் நிறைவுப் போட்டி நிலவுகிறது.

விலைகள், கூலிகள் மாறும் தன்மையுடையவை.

பொருளாதாரம் நீண்டகால சமநிலையில் இருக்கும்.

**(b)விளக்கம் :**

சேயின் அங்காடி விதியை ஒரு எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். ரூ. 1000 கோடி பெறுமான பண்டங்கள் உற்பத்தி செய்யப்படும்போது ரூ. 1000 கோடி பெறுமான உற்பத்திக் காரணிகளின் வருமானம் (வாரம், கூலி, வட்டி, இலாபம்) உருவாக்கப்படுகின்றன. இதன் விளைவாக ரூ. 1000 கோடி பெறுமான பண்டங்களுக்கான தேவை ஏற்படுகின்றது. இவ்வாறு அளிப்பும், தேவையும் சமமாகின்றது. அளிப்பு கூடுகின்றபோது உற்பத்திக் காரணிகளின் வருவாயும் அதே அளவு கூடுவதால், தேவையும் அதிகரிக்கும். எனவே, ூஅளிப்பு அதன் தேலையை உருவாக்குகிறது". இதனால் மிகையான உற்பத்தி, வேலையின்மை, பொருட்தேக்கம் ஏற்படாது. சுருங்கக்கூறின்,

$$\Delta O = \Delta Y = \Delta E$$

உற்பத்தி அதிகரிப்பு ஸ்ரீ வருமான அதிகரிப்பு ஸ்ரீ நுகர்ச்சி செலவு அதிகரிப்பு

ரூ.1000 கோடி பெறுமான பொருள் உற்பத்தி → உற்பத்திக் காரணிகளின் வருமானம் ரூ. 1000 கோடி

பண்டங்களின் அளிப்பு ரூ. 1000 கோடி

ரூ. 1000 கோடி பெறுமான பொருளுக்கான தேவை

உற்பத்தியாளர்களின் தவறான மதிப்பீட்டின் காரணமாக ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவையானது தற்காலிகமாக அளிக்கலாம் என்பதை சே ஒத்துக் கொண்டாலும், பொதுவாக எல்லாப் பண்டங்களின் உற்பத்தியையும் சேர்த்துப் பார்க்கும் போது போதுமான மிகை உற்பத்தி அல்லது பொதுவான வேலையின்மை ஏற்டபடாது என அவர் குறிப்பிடுகிறார்.

தொன்மைப் பொருளியலறிஞர்களின் முழுநிறை வேலைவாய்ப்புக் கோட்பாடு சேயின் அங்காடி விதியையும் பண அளிப்பு கோட்பாட்டையும் சார்ந்திருப்பதால் அவற்றை இங்கு விளக்கலாம்.

**அங்காடி விதி விளக்கம் :** பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிரெஞ்சுப் பொருளியலறிஞரான ஜே.பி.சே. (Jean Baptist Say 1667-1832) ூஅளிப்பு அதனுடைய சொந்த தேவையை உருவாக்கும்" (ளுரீடலஉசநயவநள வைள

குறிப்பு

ழுறுனெநஅயனெ) என்று கூறிய அங்காடி விதி ஒரு காலத்தில் மிகப்புகழ் பெற்றிருந்தது. இக்கருத்துப்படி உற்பத்தியே பொருளுக்கு அங்காடியை உருவாக்கிவிடும்.

சேயின் அங்காடி விதிப்படி சுதந்திரப் பொருளாதாரத்தில் ஏற்படுத்தும். அதாவது பொதுஅளிப்பும் உற்ப்பத்திக்காரணிகளின் மொத்த வருவாய் பொருட்களுக்கும் பணிகளுக்கும் தேவையை பொதுத்தேவையும் சமமாக இருக்கும். இதனைக் கீழ்கண்டவாறு விளக்கலாம்.

பொருட்களின் உற்ப்பத்தி கூலி வட்டி வாரம் ஒரு கோடி ரூபாய் ஆதாயமாக வருவாய் ஒரு கோடி ரூபாய் பொருட்களின் அளிப்பு பொருட்களுக்கான தேவை ஒரு கோடி ரூபாய் பொருள் உற்பத்தியாகின்ற பொழுது இரண்டு விளைவுகள் ஏற்படுகின்றன.

ஒரு பக்கம் ஒரு கோடி ரூபாய் உற்பத்திக்காரணிகளுக்கு வருவாயாகச் சென்று ஒரு கோடி ரூபாய் பொருட்களுக்கான தேவையாக உருவெடுக்கின்றது. மறுபக்கம ஒரு கோடி ரூபாய் பொருட்கள் (அளிப்பு) அங்காடிக்கு வருகின்றன. அளிப்பும் தேவையும் சமமாகின்றது. அளிப்புக் கூடுகின்ற பொழுது உற்பத்திக் காரணிகளின் வருவாயும் கூடும். உற்பத்திக் காரணிகளின் வருவாய் கூடுகின்ற அளவிற்கு பொருட்களின் பணிகளின் தேவையும் கூடும். இதனை கூடுகின்ற உற்பத்தி கூடுகின்ற வருவாய் கூடுகின்ற செலவு என்றும் கூறலாம்.

அளிப்புத் தனக்குத்தானே தேவையை உருவாக்கிக் கொள்ளுமென்று கருதியதால் நீண்டகால பொருளாதார மந்தமோ, வேலையின்மையையோ தோன்றாதென்று எண்ணினர். தற்காலிகமாக ஏதாவது ஒரு பொருளின் உற்பத்தி மிகுதியாகலாம். முற்றொன்றின் உற்பத்தி குறையலாம். இதனால் குறுகியகால வெலையின்மை தோன்றலாம். ஆனால் அது விரைவிலேயே மாறி முழுநிறை வேலைவாய்ப்பு நிலையை அடையும்.

பண அளவுக் கோட்பாட்டின்படி விலைமட்டம் என்பது பண அளிப்பின் பணியாக இருக்கும். பண அளவின் மாற்ற விகிதத்தில் விலைமாறும் இதனை ஆஏ, ீவு என்ற சமன்பாடு காட்டுகிறது. இதன்படி பணம் மாற்று மையமாக மட்டுமே பணியாற்றுகின்றது. இதன்படி மொத்தத்தேவை மொத்த அளிப்புக்குச் சமமாக இருக்கும்.

**எடுகோள்கள்:** சேயின் விதியை கீழ்க்கண்ட எடுகோள்களின் அடிப்படையில் உருவாக்கியுள்ளார்.

1.உற்பத்தியாளர்கள் தங்களுக்குத் தாங்களே வேலைகொடுத்துக் கொள்ளும் சமுதாயமாக இருக்கும். தொவது உற்பத்தியாளர்கள் தங்களுடைய பொருட்களை விற்றே வருவாய் பெறுவார்கள்.

2.தங்களுடைய வருவாய் முழுவதையும் நுகர் பொருட்களுக்கோ, உற்பத்தியாளர் பொருட்களுக்கோ செலவிட்டு விடுவார்கள்.

குறிப்பு

3.சுதந்திரமாக மாற்றுப் பொருளாதாரம் இருக்கும். வாங்குபவர்கள் விருப்பம்போல வாங்குவார்கள்.விற்பவர்களும் சுதந்திரமாக விற்பனை செய்வார்கள். நிறைவுப்போட்டி நிலவும். உற்பத்தியிலோ, மாற்றிலோ, விலையிலோ கட்டுப்பாடு இருக்காது.

4. சேமிப்பும், முதலீடும் வேறுபட்ட பணிகளாக இருக்காத. சேமிப்பும், முதலீடும் சமமாக இருக்கும். நெகிழ்ச்சியுள்ள வட்டி வீதம் சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலைக்கு கொண்டு வரும்.

5. அரசு தலையிடாக் கொள்கையைப் பின்பற்றும் அங்காடிச் சக்திகள் செயல்படுவதில் தலையிடாது.

6. அங்காடியின் அளவு உற்பத்தியின் அளவுப்படியே அமையும். அப்பொழுது தான் அளிப்பு தேவைக்குச் சமமாக இருக்கும்.

7.பண ஓட்டம் தொடர்ச்சியாக இருக்கும். சேமிப்பு என்பது மூலதனப் பொருட்களின் முதலீடாக இருக்கும். அதாவது பணத்தை பெட்டியில் பூட்டி வைப்பது இருக்காது.

8.அங்காடி விரிவடையக் கூடியதாக இருக்கும். மாற்றுக்கு பொருட்கள் அளிக்கப்படுவதை ஒட்டி அங்காடி விரிவடையும்.

9.விரிவடையும் பொருளாதாரத்தில் புதிய நிறுவனங்களும் தொழிலாளர்களும் மற்றவர்களின் உதவியின்றி தங்களது பொருட்களை அளிப்பதன் மூலமே உற்பத்தி முறையில் தங்களை நிலைப்படுத்திக் கொள்வார்கள்.

10. பொருளாதாரம் நீண்டகாலச் சமநிலையில் இருக்கும். அங்காடி விதியின் உள்ளடக்க கருத்துகள் சேயின் அங்காடி விதியில் கீழ்க்கண்ட கருத்துக்கள் உள்ளடங்கியுள்ளன.

**1.தானே இயங்கும் பொருளாதாரம்:** சேயின் அங்காடி விதி, பொருளாதார அமைப்பு எந்த கட்டுப்படுத்தும் அதிகார சக்தியுமின்றி தானே செயல்படவதாகவும் தனக்குத்தானே ஏற்றத்தாழ்வை சரிபடுத்திக் கொள்வதாகவும் இருக்குமென்றுக் கூறுகின்றது. எடுத்துக்காட்டாக வேலையின்மை இருந்தால் கூலிகள் குறைவதன் மூலம் அனைவருக்கும் வேலை கிடைக்கும் நிலை ஏற்படுமென்ற கருத்தைக் கூறலாம்.

**2.அரசு தலையிடாமை:** சேயின் விதிப்படி அரசு பொருளாதார நடவடிக்கைகளில் தலையிடாதக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும். அரசு தலையிட்டால் தானே இயங்கும் பொருளாதாரத்தின் சமநிலை சீர்குலையும். அரசு தலையிடா நிலையில் ஏற்படுகின்ற ஏற்றத்தாழ்வுகள் அங்காடி சக்திகள் செயல்படுவதால் நீங்கி விடும் விலை, கூலி, வட்டி ஆகியவற்றில் நெகிழ்ச்சித்தன்மை இருக்க வேண்டும். தொழிலாளர் சங்கங்களும் தலையிடக் கூடாது.

குறிப்பு

**3. மிகை உற்பத்தியின்மை:** இவ்விதிப்படி பொருளாதாரத்தில் மிகை உற்பத்தி இருக்காது. உற்பத்தி மிகுதியாகின்ற பொழுது விலைகள் குறைய தேவை கூட மிகை உற்பத்தி தீர்ந்து விடும். தனித்தொழிலில் தற்காலிகமாக மிகை உற்பத்தி இருந்தாலும் நீண்டகாலத்தில் இருக்காது. பொது மிகை உற்பத்தி ஏற்பட வழியில்லை.

**4.பொது வேலையின்மை இல்லை:** சுதந்திரமான பொருளாதாரத்தில் பொதுவேலையின்மை தோன்றாது. கூலி கரைகின்ற பொழுது உழைப்புக்குத் தேவை கூடும். வேலையின்மை மறையும்.

**5. தானே வருவாய் அளித்தல்:** வேலையற்றவர்களையும் பயன்படுத்தாத சாதனங்களையும் உற்பத்தியில் ஈடுபடுத்துதல் ஆதாயமாக இருக்கும். ஏனென்றால் அவை தங்களுக்குத்தாங்களே வருவாய் அளித்துக் கொள்ளும்.

**6. வட்டியின் நெகிழ்ச்சி:** வட்டி நெகிழ்வுடையதாக இருப்பதால் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும்.

**7. பணம் மாற்று மையமாக மட்டும் இருக்கும்:** பணம் பண்ட மாற்றிலுள்ள சிக்கலைத் தீர்ப்பதாக மாற்று மையமாக மட்டும் பயன்படுவதாக இருக்கும். அது பொருளாதாரத்தின் வேறுவிளைவுகளை ஏற்படுத்தாது.

**திறனாய்வு:** ஜே.எஸ்.மில் ஆப்பிரட்மார்சல் ஏ. சி. பிகு. போன்றவர்கள் சேயின் விதியை பெரிதும் ஆதரித்தனர். ஆனால் மாறிய சூழ்நிலையில் சேயின் விதி அப்படியே பொருந்தவில்லை. ஆதலால் அமெரிக்க இங்கிலாந்து பொருளியலறிஞர்கள் குறைகூறத் தொடங்கினர்.குறிப்பாக அமெரிக்கவின் ஜே.எம்.கிளார்க் வன்மையாக சாடினார். கீன்ஸ் இதனைக் குறைகூறியதோடு இல்லாமல் புதிய வேலைவாய்ப்புக் கோட்பாட்டை உருவாக்கி சேயின் விதியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டார். சேயின்விதி பற்றிக் கூறப் பெறும் குறைகளைத் தொகுத்துக் கூறலாம்.

**அளிப்பு தேவையை உருவாக்காமை:** உற்பத்தி நோக்கில் அளிப்பு அதனுடைய தேவையை உருவாக்கும் என்பதை ஏற்கமுடியாது. சேயின்விதி மக்கள் தங்களுடைய மொத்த வருவாயையும் செலவிடுவார்களென்ற எடுகோள்களின் மீது உருவாக்கப்பெற்றுள்ளது. ஆனால் மக்கள் எல்லா வருவாயையும் செலவிடாமல் ஒரு பகுதியைச் சேமிக்கின்றனர். வருவாய் ஒட்டத்தில் ஒரு பகுதியைச் சேமிப்பதால் மொத்த தேவையில் பற்றாக்குறை ஏற்பட்டு மிகை உற்பத்தி ஏற்படுகின்றது. ஆனால் தொன்மைப் பொருளியலறிஞர்கள் சேமிப்பை எல்லாம் முதலீடு செய்வார்களென்று எண்ணினர். திறனாய்வாளர்கள் வட்டியின் செல்வாக்கை ஒட்டியே முதலீடு அமைவதால் சேமிப்பெல்லாம் முதலீடாவதில்லை என்று சுட்டிக்காட்டுகின்றனர்.

**வேலையின்மை:** வேலைவாய்ப்பு நோக்கில் தற்காலிகமாக மட்டுமே வேலையின்மைச்சிக்கல் இருக்குமென்ற கருத்தை ஏற்க முடியாது. எல்லா முதலாளித்துவ நாடுகளிலும் வேலையின்மைச் சிக்கல் இருக்கின்றது.

குறிப்பு

கூலியைக் குறைப்பதால் நெகிழ்ச்சியால் மட்டும் முழுநிறை வேலைவாய்ப்பு ஏற்படுவதில்லை. முறாக கூலியைக் குறைப்பதால் வருவாய் குறைய தேவைகுறைய உற்பத்தி குறைய மேலும் வேலையின்மை கூடலாம்.

**உலகப் பெருமந்தம்:** 1930 இல் ஏற்பட்ட உலகப் பெருமந்தம் சேயின் விதியை பொய்யாக்கிவிட்டது. சேயின் விதிப்படி நீண்ட பெருமந்தம் ஏற்பட முடியாது. ஆனால் உலகப்பெருமந்தம் ஏன் வாணிப ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகின்றதென்பத எண்ணிப்பார்க்க வேண்டிய தேவையை உருவாக்கியது.

**பணத்தின் பணி:** சே பணம் மாற்று மையமாக மட்டும்தான் செயல்படுகின்றதென்று கருதினார் அதனுடைய பிற பணிகளை குறிப்பாக சேமிப்புக் களஞ்சியப் பணியை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளவில்லை. இது இந்த விதியின் குறிப்பிடத்தக்க குறையாகும்.

**நுகர்வும் வருவாயும்:** தொன்மைப் பொருளியலறிஞர்கள் வருவாய் கூடுமளவிற்கு நுகர்வும் கூடுமென்று கருதினர். கீன்ஸ் இக்கருத்தை சாடினார். கீன்ஸ் வருவாய் கூடுகின்ற அதே விகிதத்தில் நுகர்வு கூடாதென்பதைச் சுட்’டிக்காட்டினார்.ஏனென்றால் உயர் வருவாய் நிலையில் சேமிப்புக்கூடும். இதனால் விளைவுள்ள தேவையில் பற்றாக்குறையும் மந்தமும் தோன்றுகிறது.

**வட்டிவீதம்:** வட்டிவீத மாறுதலால் மட்டும் சேமிப்பும் முதலீடும் சமநிலைக்கும் வருவதில்லை. சேமிப்பவர்கள் நோக்கம் வேறாகவும் முதலீட்டாளர்கள் நோக்கம் வேறாகவும் உள்ளது கீன்ஸ் வருவாய் மூலமே சேமிப்பும் முதலிடும் சமநிலையடையுமென்று கருதுகின்றார்.

**அரசின் தலையீடு:** சே. கருதியைதைப் போல பொருளாதாரம் தன்னைத்தானே சரிசெய்து கொள்வதாக இல்லை இதனால் அரசு தலையிடுவது தேவையாகின்றது. கூலிகளும் விலைகளும் நெகிழ்ச்சியுடையதாக இல்லை இதனால் அரசு தலையிட்டே முழுநிறை வேலை நிலையை ஏற்படுத்த வேண்டியுள்ளது.

**நிறைவு போட்டியின்மை:** சேயின் அங்காடி விதி நிறைவுப் போட்டி நிலவுகின்றதென்று எடுகோளில் உருவானது. ஆனால் நடைமுறையில் எங்கும் நிறைவுப் போட்டி இருப்பதில்லை.

**வேலைநிலையை விளக்காமை:** தொன்மைக் கோட்பாடு முழுநிறை வேலை நிலை இருக்குமென்ற எடுகோளின் மூலம் எப்படி வேலைவாய்ப்பு நிலை நிர்ணியிக்கப்படுமென்பதை விளக்கத் தவறிவிட்டது.

### (c)சேயின் சந்தை விதியின் உட்கருத்துகள்:(Implication)

அளிப்புத் தேவையை உருவாக்குவதால் பொருளாதாரத்தில் மிகையான உற்பத்தி அல்லது வேலையின்மை இல்லை. (இக்கருத்தின் அடிப்படையில் தொன்மைவாதிகள் முழுவேலை நிலையை ஏற்றுக் கொண்டார்கள்).

குறிப்பு

பொருளாதாரத்தில் வேலையில்லாதவர்கள் இருக்கும் வரை, முழுவேலை நிலையை அடையும்வரை அவர்களை உற்பத்தியில் பயன்படுத்துவது இலாபகரமானது.

அங்காடி விரிவடைவது ஆதாயமாக இருக்கும். ஏனெனில் தேவை கூடி விலையும் கூடும்.

அங்காடியானது ( பொருளாதாரமானது ) தானாக சரி செய்து கொள்ளும் இயல்பு இருப்பதால் அரசின் தலையீடு தேவையில்லை. சேயின் அங்காடி விதி தலையிடாக் கொள்கைக்கு ஆதரவு தருகின்றது.

அளிப்பு கூடும்போது தேவையும் கூடுவதால் அங்காடியில் பொருள் தேக்கம் இல்லை.

வட்டிவீத நெகிழ்ச்சியானது, சேமிப்பிற்கும், முதலீட்டிற்கும் இடையில் சமநிலையை ஏற்படுத்துகின்றது.

பணம் ஒரு திரையாக (இடையீட்டுக் கருவியாக) செயல்படுகின்றது. ஒவ்வொருவரும் பிறர் நலனில் அக்கறை கொண்டுள்ளனர். எனவே உற்பத்தியாளர், நுகர்வோர் எனப் பிரிப்பது அறிவற்றதாகும்.

சேயின் அங்காடி விதி சுதந்திர வணிகத்தை ஆதரிக்கின்றது. நாம் பிற நாட்டு பொருட்களை வாங்கும் போது அவாடகள் நமது பொருட்களை வாங்குவார்கள்.

நீண்ட காலத்தில் முதலாளித்துவ பொருளாதாரமானது தானாகவே முழுவேலை வாய்ப்பு சமநிலை அடையும்.

## 4.2. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. சேயின் சந்தை விதியைப் பற்றிக் கூறுக.
2. சேயின் அங்காடி விதியின் எடுகோள்கள் யாவை?

## 4.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** ஸ்ரீஅளிப்பு அதனுடைய தேவையை உருவாக்குகிறது' என்பது து.டீ. சே அவர்களின் அங்காடி விதியாகும். அதாவது உற்பத்தியே பண்டங்களுக்கு அங்காடியை உருவாக்கி விடும். சேயின் அங்காடி விதிப்படி, ஒவ்வொரு உற்பத்தியும் அதே அளவு வருமானத்தை (வாரம், கூலி, வட்டி, இலாபம்) உருவாக்குகிறது.

2. **(ய)எடுகோள்கள் :**

சேயின் அங்காடி விதி பின்வரும் எடுகோள்களின் அடிப்படையில் அமைந்துள்ளது.

அரசின் தலையீடு இல்லை.

அங்காடிப் பொருளாதாரத்தில் விலை என்ற கருவியானது மக்கட்தொகைப் பெருக்கத்தையும், முதலாக்கத்தையும் தூண்டுகிறது.

அங்காடியின் அளவு விரிவடையும் தன்மையுடையது.

குறிப்பு

வட்டிவீத நெகிழ்ச்சியினால் சேமிப்பும், முதலீடும் சமநிலையில் இருக்கும்.

## 4.4. சுருக்கம்

வேலைக் கோட்பாட்டில் சேயின் சந்தை விதியும் அதனால் பொருளாதாரத்தில் நீண்டகால சமநிலையும் இருக்கும் என்றும் மற்றும் அதைப் பற்றி பல வல்லுநர்கள் திறனாய்வு செய்த அளிப்புத் தேவையை உருவாக்காமை, வேலையின்மை, உலகப் பெருமந்தம், நிறைவுப் போட்டியின்மை பணத்தின் பணி பற்றித் தெளிவாகக் கூறுகிறது.

## 4.5. முக்கிய வார்த்தைகள்

**அங்காடி விதி:** "அளிப்பு அதனுடைய சொந்த தேவையை உருவாக்கும்" (ளுரீடல உசநயவநள வைள ழறெ னநஅயனெ) என்று கூறிய அங்காடி விதி ஒரு காலத்தில் மிகப்புகழ் பெற்றிருந்தது. இக்கருத்துப்படி உற்பத்தியே பொருளுக்கு அங்காடியை உருவாக்கிவிடும்.

**தானே இயங்கும் பொருளாதாரம்:** சேயின் அங்காடி விதி, பொருளாதார அமைப்பு எந்த கட்டுப்படுத்தும் அதிகார சக்தியுமின்றி தானே செயல்படவதாகவும் தனக்குத்தானே ஏற்றத்தாழ்வை சரிபடுத்திக் கொள்வதாகவும் இருக்குமென்றுக் கூறுகின்றது. எடுத்துக்காட்டாக வேலையின்மை இருந்தால் கூலிகள் குறைவதன் மூலம் அனைவருக்கும் வேலை கிடைக்கும் நிலை ஏற்படுமென்ற கருத்தைக் கூறலாம்.

## 4.6. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. சேயின் அங்காடி விதி என்றால் என்ன?
2. சேயின் அங்காடி விதியில் உள்ள இரண்டு கருத்துக்களைத் தெரிவிக்க.

**நெடுவினாக்கள்:**

1. சேயின் அங்காடி விதில் எள்ள எடுகோள்களை சுருக்கமாகக் கூறுக.
2. சேயின் சந்தை விதியின் உட்கருத்துகள் யாவை?

## 4.7. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

1. வை‘, ஆ.ஊ. (2005), "பேரியல் பொருளாதாரக் கொள்கை", விகாஸ் பப்ளீங் ஹவுஸ், புது டெல்லி.

குறிப்பு

# அலகு – 5 வேலை கோட்பாடு – III

**அமைப்பு**



## 5.1. கெய்னீயன் வேலைக் கோட்பாடு

நாட்டில் அனைவருக்கும் வேலை கிடைக்க வேண்டுமென்று விரும்புகின்றோம். எல்லோருக்கும் வேலை வாய்ப்பளிப்பது தற்காலத் திட்டங்களின் தலையாய நோக்கமாக இருக்கின்றது. வேலையின்மையால் ஏற்படுகின்ற சமுதாய, பொருளாதாரச் சீர்கேடுகளை நாமறிவோம். வேலையின்மைச் சிக்கலைத் தீர்த்து, வேண்டுகின்றவர்களுக்கெல்லாம் வேலைவாய்ப்பளிக்க வேலை வாய்ப்பின் பல்வேறு நிலைகளையும் பற்றி அறிந்துக் கொள்வது தேவையாகும்.

**கெயின்ீயன் வேலைவாய்ப்புக் கோட்பாடு- ஒரு மதிப்பீடு**

ஹேஜ்லிட் ‘‘இருபதாம் நூற்றாண்டில் மிகவும் புகழ்பெற்ற பொருளியலறிஞர் ஜான்மேனார்டு கீன்ஸ்”, என்று கூறுகின்றார். ‘‘எந்த ஒரு தேர்வின் மூலம் பாதித்தாலும் எல்லாக் காலங்களிலும் தோன்றிய மிகப்பெரிய பொருளியலறிஞர்களில் ஒருவராக கெயின்ீயன் நிற்கின்றார். இருபதாம் நூற்றாண்டு இது வரை உருவாக்கிய மிக ஆற்றல் மிக்க சிந்தனையாளர் கெயின்ீயன் தான்”, என்று ஹென்சன் குறிப்பிடுகின்றார். கெயின்ீயன் வேலை வாய்ப்புக் கோட்பாட்டை மதிப்பீடு செய்தது கெயின்சைப் புரிந்து கொள்ளத் துணை செய்யும்.

**கெயின்ீயப் பொருளாதாரத்தின் இயல்புகள்**

தொன்மைப் பொருளியலறிஞர்களிடமிருந்து வேறுபட்ட சிந்தனை கொண்டிருந்த கெயின்ீயன் பொருளியலின் இயல்புகளை சுட்டிக்காட்டலாம். இந்தப் பின்புலம் கெயின்ீன் கருத்துக்களின் ஆழ அகலத்தை அறிய உதவும்.

குறிப்பு

**குறுகியகாலப் பொருளாதாரம்:** கெயின்ீயப் பொருளாதாரம் குறுகியகாலப் பொருளாதாரமாகும். கெயின்ீயன் நீண்ட கால நோக்கைப் புறக்கணிக்கின்றார். நீண்டகாலத்தில் நாமெல்லாம் இறந்துவிடுவோம் என்று அவர் கூறுவது அவருடைய வாழ்க்கைத்தத்துவம் முக்கியமாக குறுகிய காலத் தத்துவம் என்று கூறுகின்றார்.

**பேரியல் பொருளாதாரம்:** கெயின்ீன் பொருளாதாரத்தை முழுமையானதாகப் பார்க்கின்றார். துனி நிறுவனத்தையோ தனித்தொழிலையோ பற்றி ஆராயமால்இ பொருளாதாரத்தின் மொத்த தொகுதியான நுகர்வு உற்பத்தி வருவாய் தேவை சேமிப்பு முதலீடு ஆகியவற்றை ஆராய்கின்றார் இந்த வகையில் கெயின்ீயப் பொருளாதாரம் தொகு பொருளியலாக அதாவது பேரியல் பொருளாதாரமாக ஒளிர்கின்றது.

**பணப் பொருளாதரம்:** கெயின்ீயப் பொருளாதாரம் பணவியல் பொருளாதாராமாக உருவெடுத்துள்ளது. கெயின்ீன் வருவாய் உற்பத்தி வேலைவாய்ப்புக் கோட்பாடுகளில் பணம் உயிர்மூச்சாக ஊடுசரடாக உள்ளது. கெயின்ீன் பணத்தை வெறும் மாற்றுமையாகவோ கணக்கலகாகவோ மட்டும் கருதாமல் மதிப்புக்களஞ்சியமாக எண்ணி தனது கோட்பாட்டில் பகுத்தாய்வில் அதற்கு முதன்மையான இடமளித்திருக்கின்றார்.

**எல்லாவற்றையும் உள்ளடக்கிய பொருளாதார சிந்தனை:** கெயின்ீன் எல்வா வகையான சூழ்நிலைகளையும் அவற்றோடு தொடர்புடைய சிக்கல்களையும் எண்ணிப் பார்க்கின்றார். பணவாட்டத்தைப் போன்றே பணவீக்கத்தினையும் வேலைவாய்பின் பல்வேறு நிலைகளையும் ஆராய்கின்றார். ஆதலால் கெயின்ீயப் பொருளாதாரத்தை எல்லாவற்றையும் உள்ளடக்கிய பொருளாதாரச் சிந்தனை என்கின்றோம்.

**முதலீட்டு சார்புடையது:** கெயின்ீயன் முதலீட்டுக்கு தலையாய் இடமளிக்கின்றார். வேலைவாய்ப்பை நிர்ணயிக்கும் காரணிகளான நுகர்வு முதலீடு இரண்டிலும் நுகர்வு குறுகியகாலத்தில் நிலையாக இருக்குமென்று கருதியதால் முதலீட்டிற்கும் முக்கியஇடம் அளிக்கின்றார்.

**அரசின் தலையீடு:** கெயின்ீயன் தலையிடாப் பொருளாதாரக் கொள்கையை ஏற்கவில்லை. நாட்டுப்பொருளாதாரம் சீராக இயங்க அரசு தலையிடுவது தேவையென்ற அடிப்படையிலேயே பொருளாதாரத்தை உருவாக்கியுள்ளார்கள்.

**முதலாளித்துவ சீர்திருத்த பொருளாதாரம்:** முதலாளித்துவத்தை சீர்திருத்திக் கட்டிக்காக்கும் பொருளாதாரமாக கென்சியப் பொருளாதாரம் இருக்கின்றது. ஆதலால்தான் ஜான் ஈடன் (துழாெ நுயவயெ) கெயின்ீயனுக்கு முதலாளித்துவம் நேர்த்தியானதாக இருக்கின்றது. ஆதை சரிசெய்து கொள்வதுதான் தேவையானதாகும் என்கின்றார்.

**எதிர்பார்க்கும் பொருளாதாரம்:** கெயின்ீயப் பொருளாதாரம் மக்களின் முதலீட்டாளர்களின் எதிர்பார்ப்பு பொருளாதாரத்தில் எத்தகைய மாற்றங்களை

ஏற்படுத்துமென்பதை ஆராய்கின்றது எதிர்பார்ப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றது.

குறிப்பு

**புள்ளி விவரங்களின் மீதமைந்த பொருளியல்:** கெயின்ரீயன் தன்னுடைய பொருளியல் கோட்பாட்டை உறுதியான புள்ளி விவரங்களின் மீது அமைத்திருக்கின்றார். ஆதலால் கருத்தியல் முக்கியத்துவம் மட்டுமின்றி நடைமுறை முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கின்றது.

## 5.2. நிர்ணயம்:

பொருளியல் சிந்தனைக்கு கீன்ஸ் வழங்கிய கருத்துக்கள் சிந்தனைக்கு உரமளித்து பொருளியல் மேலும் வளர துணை செய்துள்ளன அத்தைகைய கருத்துக்களைத் தொகுத்துக் கூறலாம்.

1. **குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலை:** முழுநிறை வேலைவாய்ப்பு நிலையில்தான் பொருளாதாரம் சமநிலையில் இருக்குமென்றும் எப்பொழுதும் பொருளாதாரம் முழுநிறை வேலைவாய்ப்பு நிலையில் இருக்குமென்றும் தொன்மை பொருளியலறிஞர்கள் கூறிய கருத்தை மறுத்து நடைமுறையில் குறைந்த வேலைவாய்ப்பு நிலையில் பொருளாதாரம் சமநிலையில் இருக்குமென்று நிலை நாட்டியது கெயின்ரீன் கருத்துச்சாதனைகளில் ஒன்றாகும். குறுகியகாலத்திலும் நீண்டகாலத்திலும் குறைந்த வேலைவாய்ப்பு சமநிலை இருக்கலாமென்கின்றார். இந்த வகையில் நடைமுறைச் சூழ்நிலைக்கேற்ப கெயின்ரீயப் பொருளாதாரம் அமைகின்றது.

2. **நுகர்வு விருப்பம்:** கெயின்ரீன் முக்கியமான கருத்துப்படைப்புக்களில் ஒன்று நுகர்வு விருப்பம் கருத்து கெயின்ரீயப் பொருளாதாரத்தின் அச்சாணியாக இருக்கின்றது. நிலையான நுகர்வு சார்புபற்றிய கெயின்'ன் உளவியல் விதி பொருளாதாரச் சிந்தைனையில் புரட்சியை விளைவித்தது. சமீபகாலத்தில் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் நடைபெற்ற புள்ளிவிவரச்சேகரிப்புக்கள் கெயின்ரீன் உளவியல் நுகர்வுச் சார்பை உறுதிப்படுத்துகின்றது.

3. **பெருக்கிக் கருத்து:** நுகர்வு விருப்பத்தோடு தொடர்புடையது. கெயின்ரீயன் பெருக்கிக் கருத்து தொடக்க முதலீட்டு இறுதியில் மொத்த வருவாயை பெருக்குகின்றதென்ற கருத்திற்கு வடிவம் கொடுத்ததன் மூலம் கெயின்ரீன் மரபு வழிச் சிந்தனையை மாற்றினார். தற்கால வேலைவாய்ப்பு வாணிபச்சுழல் கோட்பாட்டில் பெருக்கிசக் கருத்துச் சிறப்பாக இடமிருக்கின்றது.

4. **கூலிகுறைப்பும் வேலைவாய்ப்பும்:** கூலிக்கும் வேலை வாய்ப்புக்கும் உள்ள தொடர்பு பற்றி கெயின்ரீன் கூறிய கருத்து புதுமையானதாகவும் போற்றதக்கதாகவும் இருந்தது. தொன்மை பொருளியலறிஞரான பிறகு பொருளாதாரமந்த காலத்தில் கூலியைக் குறைக்கின்ற பொழுது வேலையின்மைச்சிக்கல் தீரும் என்று கருதினார். இந்த அடிப்படையில் தொன்மைப் பொருளியலறிஞர்கள் கூலியின் செலவு பகுதியை(Costaspect)

குறிப்பு

மட்டுமே பார்த்தனர். கூலியின் வருவாய் பகுதியையும் பார்க்கத் தவறிவிட்டனர். ஆனால் கெயின்ீயன் கூலியை வருவாய் அடிப்படையில் நோக்கி கூலியைக் குறைப்பது வாங்கும் சக்தியையும் அதன் வழி விளைவுள்ள தேவையைக் குறைத்து வேலையின்மைச் சிக்கலைப் பெருக்குமென்று சுட்டிக்காட்டினார். கூலியைக் குறைப்பதினால் அல்ல மொத்த தேவையைக் கூட்டுவதன் மூலமே வேலைவாய்ப்பைப் பெருக்க இயலுமென்பதை நிலை நாட்டியது குறிப்பிடத்தக்கதாகும்.

**5. நீர்மை விருப்பக்கோட்பாடு:** கெயின்ீயன் வட்டி பற்றிய நீர்மை விருப்பக்கோட்பாடு பொருளியலுக்கு கெயின்ீன அளித்த கொடைகளில் ஒன்றாகும். கெயின்ீயன் அளித்தக் கொடைகளில் ஒன்றாகும். கெயின்ீயன் வட்டியை ஒரு பணவியல் காரணியாகவே கருதினார் மனிதர்களுக்கு ரொக்கமாகச் சொத்துக்களை வைத்திருக்க வேண்டுமென்ற விருப்பம் இயல்பாக உள்ளது. இத்தகைய ரொக்க விருப்பத்தை விட்டுப் பிரிய வழங்குகின்ற வெகுமதியாகவே கெயின்ீன வட்டியைக் கருதுகின்றார். சமுதாயத்தின் ரொக்க விருப்பத்திற்கான பேர நோக்கம் முன்னெச்சரிக்கை நோக்கம் ஊக்க நோக்கம் ஆகிய மூன்றையும் சுட்டிக்காட்டி வட்டிக் கோட்பாட்டை விளக்கியது கெயின்ீயன் சிறப்பாகும்.

**6. மூலதனத்தின் இறுதிநிலை திறன் (M.E.C):** ஆதாய விகிதம் குறைவதைப்பற்றியும் நீண்ட காலத்தேக்கநிலை (ளுநஉரடயச ளுவயபயெவழைெ) பற்றியும் கெயின்ீயனுக்கு முன்பே பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டிருந்தார்கள். குறைந்து செல் ஆதாய விகிதத்திற்கு மாற்றுப்பெயர் போல மூலதனத்தின் இறுதி நிலைத்திறன் கருத்து இருந்தாலும அதனை கெயின்ீயன் கூறிய முறையும் வலியுறுத்திய வகையும் தனிச்சிறப்புடன் அமைந்தன மேற்கத்திய நாடுகளுக்குரிய முதலீட்டு வாய்ப்புக்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இல்லையென்பதை மூலதனத்தின் இறுதிநிலைக் கருத்தின் மூலம் விளக்கியது கெயின்ீன் சிறப்பாகும்.

**7. பணவீக்க பணவாட்ட இடைவெளிகள்:** கெயின்ீயன் அவருடைய பணவீக்க இடைவெளி பணவாட்ட இடைவெளிக் கருத்தின் மூலம பொருளாதாரம் நடைமுறையில் எப்படிச்செயல்படுகின்றதென்பதைப் புரிந்துகொள்ளத் துணைசெய்கின்றார். பணவீக்க இடைவெளிக்(Inflantonary Gap) கருத்து தொகு தேவை முழு வேலைவாய்ப்பு நிலைக்குரிய தொகு தேவைக்கு மேல் இருப்பதால் பொருட்களின் அளிப்பைக் கூட்ட முடியாத நிலையை விளக்குகின்றது. பணவாட்ட இடைவெளி முழுநிறை வேலைவாய்ப்புக்குரிய தொகு தேவைக்கும் குறைவாக தொகு தேவை இருக்கின்ற பொழுது தோன்றுகின்றது. கெயின்ீன் பணவீக்க இடைவெளியை போக்க முழுநிறை வேலைவாய்ப்புத் தொகு தேவையளவுக்கு நாட்டிலுள்ள தொகு தேவையைக்குறைக்க வேண்டுமென்றும் பணவாட்ட இடைவெளியை நீக்கத்

தொகு தேவையைக் கூட்ட வேண்டுமென்றும் கூறுகின்றார். இந்த இரு கருத்துக்களின் மூலம் பொருளாதாரத்தில எப்படி சமநிலையை ஏற்ப்படுத்த முடியுமென்பதை கெயின்ஸீன் கூறுகின்றார்.

குறிப்பு

**8. பணக் கோட்பாட்டை வேலைவாய்ப்புக் கோட்பாட்டோடு இணைத்தல்:**

பணக்கோட்பாட்டையும் வேலைவாய்ப்புக் கோட்பாட்டையும் வெற்றிகரமாக இணைத்தது கெயின்ஸியனின் சிறப்பாகும். தோன்மைப் பொருளியலறிஞர்கள் இரண்டையும் தனித்தனியாகவே ஆராய்ந்தனர். கெயின்ஸியன் வருவாய், உற்பத்தி, வேலைவாய்ப்பு ஆகியவற்றில் பணத்தின் செல்வாக்கை விளக்கினார். கெயின்ஸியனின் ஆய்வினால் பணக்கோட்பாடு, இப்பொழுது வேலைக்கோட்பாட்டின் ஒரு பகுதியாகிவிட்டது.

**9. கெயின்ஸியனின் பேரியல் போக்கு:** கெயின்ஸியனின் பேரியல் பொருளாதாரத்தை ஒட்டு மொத்தமாகப் பார்க்கின்றார். அவருடைய இந்தப்பேரியல் அணுகுமுறை பொருளாதார சிந்தனையை வியக்கத்தக்க வகையில் மாற்றியது. அவர் தனது உற்பத்தி வேலைவாய்ப்புக் கோட்பாடுகளை எல்லாம் பேரியல் நோக்கிலேயை உருவாக்கினார். கெயின்ஸியனின் பேரியல் நோக்கு பொருளாதாரச் சிந்தனையில் திருப்பு முனையாக அமைந்தது.

**10. ஆய்வுக் கருவிகள்:** மார்'லைப் போன்றே கெயின்ஸியனும் பொருளாதார ஆய்வுக்குப் பயன்படக் கூடிய பல கருவிகளை வழங்கியுள்ளார். அவற்றில் நுகர்வு விருப்பம், மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் முதலீட்டுத் தூண்டுதல் போன்றவை குறிப்பிட்த்தக்கதாகும்.

**11. இயங்குநிலை கூறுபாடு:** பொருளியல் சிந்தனையில் முதன்முதலில் இயங்குநிலைக் கருத்தைப் புகுத்திய பெருமை கெயின்ஸியனுடையதாகும். தொன்மை பொருளியலறிஞர்கள் இயங்கா நிலைச் சமநிலையையே ஆராய்ந்தனர். கெயின்ஸியன் மாறி வருகின்ற சூழ்நிலையில் எப்படி சமநிலை ஏற்படுமென்பதை விளக்க முயன்றார். முதலீட்டில் எதிர்கால எதிர்பார்ப்புகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டார். இயங்குநிலைக் கூறுபாட்டை பொருளியல் கோட்பாட்டில் இணைத்ததன் மூலம் பொருளியல் சிந்தனையின் பரப்பை கெயின்ஸியன் விரிவடையச் செய்திருக்கிறார்.

**12.முதலீட்டின் முக்கியத்துவம்:** கெயின்ஸியன் வேலைவாய்ப்பை நிர்ணியக்கின்ற முக்கியமான காரணயாக முதலீட்டைக் கருதுகின்றார். நுகர்வு நிலையானதாக இருப்பதால் அரசு முதலீட்டை பெருக்குவதன் மூலமாகவே முழு நிறை வேலைவாய்ப்பை உருவாக்கி பொருளாதாரத்தில் ஒரு நிலையான போக்கை ஏற்படுத்த இயலுமென்று சுட்டிக் காட்டுகின்றார். வேலைவாய்ப்பை நிர்ணயிப்பதில் முதலீட்டின் முக்கியத்துவத்தை வலியுறுத்திய பெருமை கெயின்ஸியனையே சாரும்.

குறிப்பு

**13.பொதுத்தன்மை:** கெயின்ீயனின் கோட்பாட்டில் உள்ள பொதுமை குறிப்பிட்டத்தக்கதாகும். கேயின்ீயனின் கோட்பாடு குறைநிலை வேலைவாய்ப்பு முழுநிலை வேலைவாய்ப்பு மிகை நிலைவேலைவாய்ப்பு என்று எல்லா நிலையிலும் ஒன்று போலப் பொருந்தக் கூடியதாகும். ஆனால் தொன்மை பொருளியலறிஞர்களின் கோட்பாடு முழுநிறை வேலைவாய்ப்புள்ள தனிச் சூழ்நிலைக்கு மட்டுமே பொருந்தக் கூடியதாகும்.

**கெயின்ீயன் கோட்பாடு நடைமுறை முக்கியத்துவம்:**

கெயின்ீயன் கருத்துகளும் கோட்பாடும் பொருளியல் சிந்தனையில் மட்டும் புரட்சி செய்யவில்லை. மிகுந்த நடைமுறை முக்கியத்துவம் கொண்டவைகளாகவும் பொருளாதாரக் கொள்கையை உருவாக்க வழிகாட்டக் கூடியனவாகவும் இருக்கின்றன. கெயின்ீயன் கருத்துகள் இன்றுள்ள பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்க்க வழிகாட்டுகின்றன. எடுத்துக்காட்டுகளாக சிலவற்றைக் கூறலாம்.

**அரசின் பங்கு:** தொன்மைப் பொருளியலறிஞர்களின் தலையிடாக்கொள்கையின் அடிப்படைத்தவறுகளைச் சுட்டிக் காட்டிய கெயின்ீயன் முழுநிறை வேலைவாய்ப்பை அடைய அரசு தலையிட்டு முதலீடு செய்ய வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார். தனியார் பொருளாதாரத்தில் விளைவுள்ள தேவையைப் பெருக்க அரசு முதலீட்டைப் பெருக்க வேண்டுமென்பதைச் சுட்டிக் காட்டுகின்றார்.

**பற்றாக்குறை வரவு-செலவுத் திட்டம்:** சமநிலை வரவுச் செலவு திட்டம்தான் சிறந்ததென்ற கருத்தை மாற்றினார். நாட்டில் நிலவும் பொருளாதார சூழ்நிலைக்கேற்ப வரவுச் -செலவுத் திட்டம் அமைய வேண்டுமெனச் சுட்டிக் காட்டினார். வருவாய், உற்பத்தி, வேலைவாய்ப்பு ஆகியவற்றைக் கூட்ட சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் பற்றாக்குறை வரவுச் செலவு திட்டமே ஏற்றதென்பதை நிலைநாட்டிய பெருமை கெயின்ீயனையேச் சாரும்.

**நிதிக் கொள்கை**: கெயின்ீயன் நீதிக்கொள்கையின் முக்கியத்துவத்தை உணரச் செய்தார். பொது நீதிக் கொள்கையின் மூலம் எப்படி பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தலாமென்றும் பொதுப் பணிகளின் மூலம் எப்படி வேலைவாய்ப்பைப் பெருக்கலாம் என்பதையும் உலகிற்கு உணர்த்தியவர் கெயின்ீயன் என்றால் அது மிகையாகாது.

**பணக்கொள்கை:** வாணிபச் சூழல்களை கட்டுப்படுத்தும் கருவியாக பணக்கொள்கையை பயன்படுத்தலாம் என்பதை கெயின்ீயன் வெளிப்படுத்தியுள்ளார். அதே நேரத்தில் பணக்கொள்கையின் வரையறைகளையும் சுட்டிக்காட்டினார். மைய வங்கி நாட்டின் கடன்களை கட்டுப்படுத்த வேண்டிய தேவையையும் வழிமுறைகளையும் கூறிய சிறப்பு கெயின்ீயனுக்குரியதாகும்.

குறிப்பு

**பற்றாக்குறை நிதியாக்கம்:** வளர்ச்சிக் குறைந்த நாடுகள் பற்றாக்குறை நிதியாக்கத்தின் மூலம் வளாச்சித் திட்டங்களுக்கு பயன்படுத்தலாம் என்று வழிகாட்டியவர் கெயின்ரீயன்.

**கூலிக் குறைப்பைத் தடுத்தல்:** கூலியைக் குறைப்பதன் மூலம் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க முடியுமென்றக் கருத்தை மறுத்த கெயின்ரீயன் அரசு கூலியைக் குறைத்தால் வேறு வகையான விளைவுகளே ஏற்படும் என்பதை சுட்டிக் காட்டினார்.

**சமுதாயக் கணக்கெடுப்பு**: ஒவ்வொரு நாடும் வருவாய் தொடர்பான புள்ளி விவரங்களை சேகரிக்கின்றன. பொருளியல் நிபுணர்களும் அரசினரும் சமுதாயக் கணக்கெடுப்பிற்கு முக்கியத்துவம் கொடுக்கின்றனர். இவையெல்லாம் சரியான பொருளாதாரக் கொள்கை உருவாக துணை செய்கின்றன. இதற்கெல்லாம் காரண கர்த்தா கெயின்ரீயன் என்பதை யாரும் மறுக்க இயலாது.

**கெய்னீரியன் ஒரு திறனாய்வு:**

கெய்னீரியனின் பொருளியல் கோட்பாட்டை போற்றி புகழ்பவர்கள் இருப்பதனை இருப்பதனைப் போன்றே அவரைச் சாடுகின்ற திறனாய்வாளர்களும் இருக்கின்றனர். அவர்களில் மைசஸ், ஹேயக், ரோப்கே, நைட், ஆல்பிரட் ஹான், வாட்ஸ், மார்கெட், ஹென்றி ஹேஜ்லெட், லாரன்ஸ் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர். குரிஹரா, “கெயின்ரீயன் தவிர்க் முடியாத பகுத்தாய்வுக் கருவிகளை வழங்கிய போதிலும் அவர் பதிலளித்தவற்றைவிட எழுப்பிய கேள்விகள் மிகுதி'', என்றுக் கூறுகின்றார். கெயின்ரீயன் கோட்பாட்டின் மீது கூறப்பெறுகின்ற குறைகளில் முக்கியமானவற்றைத் தொகுத்துக் கூறலாம்.

**விளைவுள்ள தேவை:** கெய்னீரியன் வேலைவாய்ப்பு விளைவுள்ளத் தேவையைச் சார்ந்திருக்குமென்று கருதுகின்றார். பேராசிரியர் ஹேஜ்லிட், “விளைவுள்ள தேவைக்கும் வேலைவாய்ப்பு அளவிற்குமுள்ள சார்பு நிலையை புள்ளி விவரங்களின் அடிப்படையில் உறுதிப்படுத்தவில்லை என்று கூறுகின்றார். ஊற்பத்தி வேலைவாய்ப்பை தேவை மட்டுமல்ல. நடைமுறை விலைகளும் நிர்ணயிக்கின்றன என்பதை கெயின்ரீயன் காணத் தவறிவிட்டார் என்பதை திறனாய்வாளர்கள் கூறுகின்றனர்.

**தொகுத்தேவை:** கெய்னீரியன் தொகுதேவை வேலைவாய்ப்பை நிர்ணயிக்கின்றதென்றக் கருத்தை திறனாய்வாளர்கள் மறுக்கின்றனர். தொகுதேவையை அளிப்பும் விலையை ஓரளவு பாதிக்கின்றன. இதனை கெய்னீரியன் கருதவில்லை என்று குற்றம் சாட்டுகின்றனர்.

**நுகர்வுச் சார்பு:** கெயின்'யின் கருத்துப்படி நுகர்வு வருவாயை சார்ந்துள்ளது. பேராசிரியர் ஆக்ளே, நடப்பு வருவாயிலிருந்து நடப்பு நுகர்வு அமையுமென எளிதாக கூற முடியாது. நுகர்வு தொடர்பு கடந்த கால எதிர்பார்க்கும்

குறிப்பு

வருவாய் சிக்கலென சராசரியாகவே இருக்கும் என்கின்றார். செல்வத்தின் விளைவு, தொழில்நுட்ப மாற்றம், கல்வி, எதிர்பார்ப்புகள், சொத்து பற்றிய நோக்குகள் ஆகியவற்றிற்கும் நுகர்வுக்குமுள்ள தொடர்பை கெயின்ஸியன் கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை என்று கூறுகின்றனர்.

**முழுநிறை வேலைவாய்ப்பு :** பேராசிரியர் ஹென்றி ஹேஜ்லிட், கெயின்ஸியனின் முழுநிறை வேலைவாய்ப்பு நோக்கம் விளக்க இயலாதாதாகவும், அடைய முடியாததாகவும், வுரும்பத்தகாததாகவும் இருக்கின்றதென்று கூறுகின்றார். முழுநிறை வேலைவாய்ப்பு நிலையிலும் பிறழ்ச்சி காரணமாகவும், விருப்பமின்மையின் காரணமாகவும் வேலையின்மை இருக்குமென்பதைத் திறனாய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

**வேலையின்மையை முழுமையாக கவனியாமை:** திறனாய்வாளர்கள் கெயின்ஸியன் வேலையின்மையைப் பொதுவாக ஆராய்ந்து தீர்வு கூறுகின்றனரே தவிர அதனை முழுமையாக பல்வேறு வகைகளாக வேலையின்மை இருப்பதை ஆராயவில்லை என்று குறை கூறுகின்றனர். தொழில்நுட்ப வேலையின்மை பிறழ்ச்சிகாரணமான வேலையின்மை போன்றவற்றிற்கு கெயின்ஸியன் தீர்வு கூறியதைக் குறிப்பிடுகின்றனர்.

**நிறைவுப் போட்டி:** கெயின்ஸியன் நிறைவு போட்டி நிலவுகின்றதென்ற எடுகோளின் அடிப்படையிலேயே அவரது கோட்பாடுகளை உருவாக்கியுள்ளார். நடைமுறையில் நிறைவுப்போட்டி இல்லாததால் அவர் கோட்பாடு நடைமுறையிலிருந்து மாறுபட்டு விடுகின்றதென திறனாய்வாளர்கள் கூறுகின்றனர்.

**முதலீட்டுச் சார்பு**: கெயின்ஸியன் நுகர்வு சார்பு, முதலீட்டுச் சார்பு ஆகிய இரண்டிலும் நுகர்வுச் சார்பு நிலையானதென்றும், முதலீட்டுச் சார்பு வட்டி வீதத்தை ஒட்டியும் அமையுமென்றுக் கூறியதை திறனாய்வாளர்கள் கூறுகின்றனர். வுவட்டி வீதத்திற்கும் மூலதன இறுதிநிலைத்திறனுக்குமுள்ள தொடர்பை சிக்கலான நிலையில் கெயின்ஸியன் கூறியிரப்பதாகவும் கருதுகின்றனர். நுகர்வு விருப்பம் குறுகிய காலத்தில் கூட வேலைவாய்ப்பும் மிகுதிப்படலாமென்று சிலர் வாதிக்கின்றனர்.

**வட்டி வீதம்:** கெயின்ஸியன் வட்டி வீத கோட்பாட்டை திறனாய்வாளர்கள் வன்மையாக குறை கூறுகின்றனர். கெயின்ஸியன் யூக நோக்கம் மட்டுமே வட்டி நெகிழ்வுடையதாக இருக்குமென்று கூறியதை ஏற்றுக் கொள்ளவலைல்லை. வேறு நோக்கமும் மிகுதியான விகிதத்தில் வட்டி நெகிழ்ச்சியுடையதாக இருப்பதனைக் குறிப்பிட்டனர்.

**தொகுநிலைப் பகுத்தாய்வு:** நாட்டு வருவாய் வேலைவாய்ப்பு உற்பத்தித் தேவை அளிப்பு ஆகிய எல்லாவற்றையும் மொத்தமாக பார்ப்பதில் உள்ளார்ந்த குறை இருப்பதாக சில பொருளியலறிஞர்கள் கருதுகின்றனர்.

குறிப்பு

மொத்தமாக நாட்டின் பண வருவாயை மதிப்பிடுவதால் நடைமுறை பயனிலை என வாதிடுகின்றனர்.

**முதலீட்டுத் தூண்டுதல்:** கெயின்ஸியன் நுகர்வை விட முதலீட்டுத் தூண்டுதலுக்கே முக்கியமான இடமளிக்கினறார். இதனால் மற்றைய காரணிகளின் முக்கியத்துவத்தை கெயின்ஸியன் புறக்கணித்து விடுகின்றார் என்று இரண்டு திறனாய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

எதிர்பார்ப்புகள்: கெயின்ஸியன் முதல் தளத்தின் இறுதிநிலைத் திறனில் ஏற்படும் மாற்றங்களைப் பற்றிய முதலீட்டாளர்களின் எதிர்பார்ப்புகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றார். ஆனால் எதிர்பார்ப்புகளைப் பற்றிய ஒரு மனநிறைவளிக்கும் கோட்பாட்டை உருவாக்க தவறி விட்டார் என சிலர் கருதுகின்றனர்.

நீண்ட காலத்தைப் புறக்கணித்தால் கெயின்ஸியன் குறுகிய காலத்தையே ஆராய்கின்றார். நீண்ட காலத்தில் நாம் இறந்து விடுவோம் என்று கூறி நீண்ட காலத்தைப் புறக்கணித்து விட்டார். முதலானப் பொருட்களின் இரும்பு தொழில்நுட்பம், மக்களின் விருப்பங்கள், பழக்க வழக்கங்கள், அமைப்பு முறை, மக்கள் தொகை ஆகிய குறுகிய காலத்தில் மாறாதென்று எடுகோள்களின் அடிப்படையிலேயே கெயின்ஸியன் கோட்பாட்டை உருவாக்கியுள்ளார். இவை குறுகிய காலத்திலும் மாறுமென்று திறனாய்வாளர்கள் வாதிடுகின்றனர்.

**சேமிப்பும் முதலீடும்:** கெயின்ஸியன் சேமிப்பு முதலீடு பற்றியக் கரத்தும் கண்டனத்துக்குள்ளாகின்றன. கெயின்ஸியன் முதலீட்டுக்குக் கொடுத்த முக்கியத்துவத்தை சேமிப்புக்குக் கொடுக்கவில்லை. மேலும் ஒரு நிலையில் சேமிப்பையும் முதலீட்டையும் ஒரு காரணியின் இரு கூறுபாடுகள் என்று கூறும் கெயின்ஸியன் மற்றொரு நிலையில் இரண்டையும் முற்றிலும் வேறுபட்ட நடவடிக்கைகளாய் கருகின்றார். இந்த முரண்பாட்டை சிலர் குறிப்பிட்டு காட்டுகின்றனர்.

**வாணிபச் சுழல்கள்**: கெயின்ஸியன் வாணிபச் சுழல்களில் ஏற்படும் திருப்பு முனைகளை முதலென இறுதிநிலை திறன் எதிர்பார்ப்புகள் போன்ற கருத்துகளின் அடிப்படையில் சரியாக விளக்கவில்லை என்று திறனாய்வாளர்கள் கருதுகின்றனர். ஹேஜ்லிட், மூலதனத்தின் இறுதிநிலைத்திறன் கருத்து தெளிவற்றதென்றும் குழப்பமானதென்றும் கூறி இதனைக் கொண்டு வாணிபச் சுழல் திருப்பங்களை விளக்குதல் இயலாதென்றும் கூறுகின்றார்.

**இயங்குநிலை கூறுபாடு:** கெயின்ஸியன் தன்னுடைய கோட்பாட்டில் இயங்குநிலைக் கூறுபாடு இருப்பதாலும் தனது கோட்பாட்டை மாறுகின்ற சமநிலைக் கோட்பாடு என்று கூறுகின்றார். ஆனால் இது திறனாய்வாளர்கள்

குறிப்பு

ஏற்றுக் கொள்ளவில்லை. குரிஹாரா இதனை தேக்க நிலைகளின் ஒப்பீடு என்கின்றார்.

**மூடிய பொருளாதாரம்:** கெயின்ரியன் பண்பாட்டு வாணிபத்தால் வேலைவாய்ப்பு நிலையிலும், வருவாய் நிலையிலும் ஏற்படக் கூடிய மாற்றங்கள் இல்லாத மூடிய பொருளாதாரம் இருக்கின்றதென்று எடுகோளின் அடிப்படையில் தனது கோட்பாட்டை உருவாக்கியுள்ளார். ஆனால் நடைமுறையில் பன்னாட்டு வாணிபத்தின் தாக்கம் பொருளாதாரத்தில் குறிப்பிடத்தக்க இருப்பதால் கெயின்ரியனின் கோட்பாடு நடைமுறையில் முக்கியத்துவத்தை இழக்கின்றது என்று சிலர் கருதுகிறன்றனர்.

**பொதுக் கோட்பாடு:** கெய்ன்ரியனின் கோட்பாடு மூடியப் பொருளாதாரத்தை நிறைவுப்போட்டி நிலைக்கும் மட்டுமே பொருந்தவதால் இதனை தனிக் கோட்பாடு என்றுதான் கூற வேண்டுமே தவிர பொதுக் கோட்பாடு என்று கூறக்கூடாதென கூறுபவர்கள் உள்ளனர்.

**முடுக்கியைப் புறக்கணித்தல்:** கெயின்ரியன் முடுக்கிக் கருத்தைப் பற்றியே அவரது கோட்பாட்டில் குறிப்பிடாததை சிலர் பெருங்குறையாகக் கருதுகின்றனர்.

**நீர்மை, விருப்பக்கோட்பாடு:** கெயின்ரியனின் நீர்மை விருப்பக் கோட்பாடு கெயின்ரியனின் சொந்தக் கருத்தல்லவென்றும் 1912 ஆம் ஆண்டிலேயே கூறப்பெற்ற கருத்தென்று மைசஸ் கூறுகின்றார். மேலும் இது ஒரு திட்டவட்டமான கருத்தல்லவென்றும் சிலர் கருதினார்.

மந்தகாலப் பொருளாதாரம்: கெய்னிரியப் பொருளாதாரம் பொருளாதார நடவடிக்கைகள் மிகவும் குறைவாக இருந்த மந்த காலத்தில் உருவாகப் பெற்றதால் இதனை மந்தகாலப் பொருளாதாரம் என்று சொல்லி செழிப்புக் காலத்திற்குப் பொருந்தாது என்று கூறுகின்றவர்கள் உள்ளனர்.

**நடைமுறைக் கொள்கை:** கெயின்ரியன் நடைமுறைக் கொள்கைகளையும் திறனாய்வாளர்கள் குறை கூறுகின்றனர். கெயின்ரியனின் வேலையின்மையைப் போக்க பற்றாக்குறை நிதியாக்கத்தை கூறுகின்றார். ஆனால் பொறுப்பற்ற முறையில் அரசு வருவாய்க்கு மேல் செலவிடுகின்ற பொழுது ஏற்படக்கூடிய தீங்குகளை திறனாய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். கெய்னிரியன் வளர் வீத வரியை ஆதரித்தார். ஆனால் வளர்வீத வரி தனியார் முதலீட்டை பாவிப்பதை மற்றவர்கள் குறிப்பிடுகின்றனர்.

## 5.3. சமநிலை அளவு வேலைவாய்ப்பு

தொகு அளிப்புச் சார்பு, தொகு தேவைச் சார்பு ஆகிய இரு காரணிகளையும் சார்ந்து அமைகின்றது. தொகு அளிப்பு உற்பத்தியின் தொழில் நுட்பச் சூழ்நிலையை சார்ந்துள்ளது. உற்பத்தியின் தொழில் நுட்பச் சூழ்நிலைகள் குறுகிய காலத்தில் மாறுவதில்லை. ஆதலால் கெயின்ரியன் தொகு அளிப்புச்

குறிப்பு

சார்பு நிலையானதாக இருக்குமென்று கொண்டு பொருளாதார மந்த நிலையையும் வேலையின்மையையும் போக்க தொகுதேவைசார்பின் மீதே முழு கவனத்தையும் செலுத்தினார். வேலைவாய்ப்பு தொகு தேவையைச் சாந்துள்ளது. தொகு தேவையை நுகர்வு தேவையும் முதலீட்டுத் தேவையும் நிர்ணயிக்கின்றன.

ஆதலால், வேலைவாய்ப்பைக் கூட்ட வேண்டுமானால் நுகர்வையோ, முதலீட்டையோ அல்லது இரண்டினையுமோ கூட்ட வேண்டும். நுகர்வு வருவாயையும் நுகர்வு விருப்பத்தையும் சார்ந்து இருக்கும். வருவாய் நுகர்வு சார்பு, மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன், நீர்மை விருப்பம், பண அளவு ஆகிய மாறிகளை ஒட்டி அமைகின்றது. வருவாயையும் வேலைவாய்ப்பையும் கூட்ட வேண்டுமானால் நுகர்வு விருப்பத்தைக் கூட்டுவதன் மூலம் நுகர்வைப் பெருக்க வேண்டும். மக்களின் மனப்பான்மை, சுவை உணர்வுகள், விருப்பங்கள், சமுதாய அமைப்பு முறை ஆகியவை நுகர்வு விருப்பத்தை தீர்மானிக்கின்றன. சமுதாய அமைப்பு வருவாய் பகிர்வை நிர்ணயிக்கின்றது. இவை எல்லாம் குறுகிய காலத்தில் மாறுவதில்லை. ஆதலால் நுகர்வு விருப்பமும் நிலையாக இருக்கின்றது. ஆகவே வேலைவாய்ப்பு முதலீட்டைச் சார்ந்துள்ளது. முதலீட்டின் அளவு மாறுதலுக்கேற்ப வேலைவாய்ப்பு நிலையும் மாறும்.

வட்டி விதத்தையும் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனையும் சார்ந்து அமைகின்றது. வட்டி வீதம் குறைகின்றபொழுதோ, முதலீட்டின் இறுதிநிலை ஆக்கத்திறன் கூடுகின்றபொழுதோ அல்லது இரண்டும் ஏற்படுகின்ற பொழுதோ முதலீடு கூடும். மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் மூலதனச் சொத்துக்களின் அளிப்பு விலையையும் அவற்றின் எதிர்பர்க்கும் வருவாயையும் சார்ந்து அமைகின்றது. மூலதனச் சொத்துக்களின் அளிப்புவிலை குறைந்தாலோ எதிர்பாக்கும் வருவாய் கூடினாலோ அல்லது இரண்டும் ஏற்பட்டாலோ முதலீடு கூடும். குறுகிய காலத்தில் மூலதனச் சொத்துக்களின் அளிப்பு விலை நிலையாக இருக்குமாதலால் அதனை மாற்ற முடியாது. மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனை தீர்மானிக்கின்ற அடுத்தக் காரணியான மூலதனச் சொத்துக்களின் எதிர்பார்க்கும் வருவாய் வணிகர்களின் எதிர்ப்புகளை ஒட்டி அமையும். இது ஓர் உளவியல் காரணியாக இருப்பதால் இதனை மாற்றியும் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனை மாற்ற முடியாது. ஆதலால் மொத்தத்தில் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனை உயர்த்துவதன் மூலம் முதலீட்டை உயர்த்துவதற்குரிய வாய்ப்புக் குறைவாகவே உள்ளது.

முதலீட்டைத் தீர்மானிக்கின்ற மற்றொரு காரணியான வட்டிவீதம் பணத்தேவையையும் பண அளிப்பையும் சார்ந்துள்ளது. பணத்தேவையை நீர்மை விருப்பப் பட்டியல் நிர்ணயிக்கின்றது. நீர்மை விருப்பமும் ஓர்

குறிப்பு

உளவியல் காரணியே. இது ஊக வணிகர்கள் எதிர்கால வட்டிவீதம் எப்படி இருக்குமென்று எதிர்பார்க்கின்றார்களோ அதனை ஒட்டி அமையும். வட்டி வீதத்தை நிர்ணயிக்கின்ற மற்றொரு காரணி பண அளிப்பு. பண நிர்வாகத்தினர் பண அளிப்பை தங்கள் எண்ணம் போல் மாற்றலாம். பண அளிப்பை கூட்டி வட்டி வீதத்தை குறைப்பதன் மூலம் முதலீட்டையும் வேலைவாய்ப்பையும் கூட்ட இயலும்.

குறைநிலை வேலைவாய்ப்பு சமநிலை: கெய்னீயப் பொருளாதார பகுத்தாய்வின்படி செமிப்பு, முதலீடு, நீர்மை விருப்பம் ஆகியவற்றை ஒருங்கிணைத்துப் பார்த்தால் குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலை எப்படி சாதாரணமாக பொருளாதாரத்தில் இருக்குமென்பதை அறியலாம்.

சேமிப்பு தானே முதலீட்டுக்கு சமமாக மாறி முழுநிறை வேலைவாய்ப்பு சமநிலையை ஏற்படுத்துவதில்லை. ஆதலால் குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலையே பொருளாதாரத்தில் இருக்கின்றது. இதற்கு கெய்னீயன் மூன்றுக் குறிப்பிடத்தக்க காரணங்களைச் சுட்டிக் காட்டுகின்றார். முதலாவதாக கூலியிலுள்ள இறுக்கமானத் தன்மையினால் கூலியைக் குறைக்க முடிவதில்லை. தொழிலாளர்களும் தொழிற்சங்கங்களும் கொண்டிருக்கின்ற பணம் பற்றி மாயத்தோற்றத்தினால் கூலியில் நெகிழ்வற்றத்தன்மை இருக்கின்றது. இரண்டாவதாக, நீர்மை விரப்பப்பொறி வட்டிவிதத்தை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு குறையாமல் தடுத்து நிறுத்துகின்றது. மூன்றாவதாக, முதலீட்டுத் தேவை சார்பு வட்டி நெகிழ்வற்றதாக இருக்கின்றது. வட்டியைக் குறைப்தால் மட்டுமே முதலீடு கூடாது.

பொருளாதாரத்தில் ஓரளவு வேலையின்மை இருப்பதாகக் கொள்வோம். வேலையற்ற தொழிலாளர்கள் நடப்பில் இருக்கும் கூலியைவிடக் குறைவாகக் கூலி வாங்கிக் கொண்டு குறைவாக கூலி வாங்கிக் கொண்டு உழைக்கத் தயாராக இருக்கலாம். ஆனால் எல்லோருக்கும் வேலை கொடுக்கின்ற வகையில் உண்மைக் கூலியை போதுமான அளவு குறைக்க முடியாது. கூலியைக் குறைத்து விலையைக் குறைத்தாலும் வட்டி வீதம் குறையுமென்று கூற இயலாது. ஏனென்றால் விலை குறைவதால் மக்கள் சேமிப்பதை மிகவும் நெகிழ்ச்சியுள்ள நீர்மை விருப்பம் ஈர்த்துக் கொள்வதால் வட்டியைக் குறைக்காது. வட்டிவீதத்தைக் குறைத்தால் கூட முதலீட்டுத் தேவை வட்டி நெகிழ்வற்றதாக இருப்பதால் முதலீடு கூடாது. ஆதலால் பொருளாதாரம் குறைநிலை வேலைவாய்ப்பு சமநிலையில் இருக்கும்.

குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலையை இன்னொரு வகையிலும் விளக்கலாம். பொருளாதார மந்த காலத்தில் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் குறைவாக இருப்பதால் வட்டிவீதம் குறைவது தனியார் முதலீட்டைத் தூண்டாது. ஆகையால் அரசு முதலீட்டுத் திட்டங்களுக்குரிய

குறிப்பு

பொதுச் செலவைக் கூட்டி முதலீட்டைப் பெருக்கலாம். முதலீடு கூடுகின்ற பொழுது வேலைவாய்ப்பும் வருவாயும் அதிகரிக்கும்.

கூடுகின்ற வருவாய் நுகர்வைத் தூண்டும். நுகர்வுப் பொருட்களின் தேவை கூடுவதால் மேலும் வேலைவாய்ப்பும் வருவாயும் பெருகும். பெருக்கி செயல்படுவதால் வேலைவாய்ப்பும் வருவாயும் மாறி மாறி ஒன்றை மற்றொன்று தூண்ட கூடி சமநிலையை ஏற்படுத்தும். வருவாய் கூடும் போது நுகர்வு கூடினாலும், வருவாய் கூடும் அளவிற்கு நுகர்வு கூடாததால் ஏற்படும் சமநிலை குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலையாகும். நுகர்வு சார்பின் போக்கு வருவாய்க்கும் நுகர்வுக்கும் இடையில் வெளியை உருவாக்குகிறது. இந்த இடைவெளியை இட்டு நிரப்ப தனியார் முன் வராததால் அரசின் முதலீட்டைக் கூட்டுவதன் மூலம் தான் முழுநிறை வேலைவாய்ப்பை அடைய இயலும்.

**வரைபட விளக்கம். கெயின்ீயனின் வேலைவாய்ப்புச் சமநிலையை பின்வரும் படம் மூலம் விளக்கலாம்.**




வருவாய்∴வேலைவாய்ப்பு

முழ அச்சில் வருவாயையும் வேலைவாய்ப்பையும் அளக்கலாம். நுகர்வையும் முதலீட்டையும் செங்குத்துக் கோடான முலு அச்சில் அளக்கின்றோம். $45^0$ கோடு தொகு அளிப்புகக் கோடாகும். ஊ நுகர்வுக் கோடாகும். ஊஐ என்பது நுகர்வுச் சார்பையும் சம அளவில கூடிய முதலீட்டையும் கூடிய தொகு தேவை கோடாகும். பொருளாதாரம் நு புள்ளியில் சமநிலையில் இருக்கின்றது. இந்நிலையில் தொகு தேவையான ஊஐ தொகு அளிப்பான $45^0$ கோட்டில் சமமாக இருக்கின்றது. இது விளைவுள்ள தேவைப் புள்ளியாகும். முலு புள்ளியில் வருவாயும் வேலைவாய்ப்பும் சமமாக உள்ளன. இது குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலையாகும். முலுக என்பது முழுநிறைநிலை வாய்ப்பு நிலையென்றால் இந்நிலைக்கு தொகுதேவையையும் தொகு அளிப்பையும் கொண்டு வர தானே செயல்படும் சக்தி எதுவும் இருப்பதில்லை. இந்நிலையை அடைய வேண்டுமானால் பொது முதலீட்டை பு அளவு யுஐ கூட்ட வேண்டும். இப்பொழுது தொகு தேவைக் கோடு C+I+G ஆக இருக்கும். இது தொகு

குறிப்பு

அளிப்புக் கோட்டை நு$_1$ புள்ளியில் வெட்டுகிறது. நு$_1$ முழுநிறை வேலைவாய்ப்புவருவாயோடு தொடர்புடைய விளைவுள்ள தேவைப் புள்ளியாகும்.

## 5.4. மொத்தத் தேவை மற்றும் மொத்த வழங்கல் செயல்பாடு

### மொத்த தேவை செயல்பாடு[Aggregate Demand Function]

மொத்தத் தேவையைப் பற்றி இருவகையான கருத்துக்கள் உள்ளன. ஒன்று பண அளவுக் கோட்பாட்டு கண்ணோட்டம். இரண்டாவது மொத்தச் செலவு கண்ணோட்டம். பண அளவுக் கருத்து தேவையை ஒரே மொத்தமானதாகக் கருதுகின்றது. அவற்றை நிாணயிக்கும் தனிப்பட்ட பகுதிகளை கணக்கிலெடுக்கவில்லை. இது தொன்மை பொருளியலறிஞர்களின் கருத்தாகும். இதன்படி விளைவுள்ள தேவையில் பற்றாக்குறை ஏற்படாது. இதற்கு மாற்றாக அமைந்துள்ள செலவுக் கண்ணோட்டத்தின்படி மொத்தத் தேவை என்பது மாறுபட்ட வருவாய் நிலைகளில் தொழில் முயல்வோர்கள் தங்களுடைய பொருட்களை விற்பதால் எதிர்பார்க்கும் வருவாயை ஒட்டி அமைகின்றது. அதாவது சமுதாயத்தில் முக்கிய செலவிடும் துறைகளின் செலவுக்கு சமமாக மொத்தத் தேவை இருக்கும். மொத்தத் தேவை பட்டியல் என்பது குறிப்பிட்ட சூழ்நிலைகளில் எதிர்பாக்கின்ற தேவையாகும்.

வீடுகளும், வாணிப நிறுவனங்களும் உள்ள இருதுறைப் பொருளாதாரத்தில் நுகர்பொருட்கள் - பணிகளின் மீதும் முதலீட்டுப் பொருட்களின் மீதும் எதிர்பார்க்கின்ற செலவு மொத்தத் தேவையை நிர்ணயிக்கும். நடைமுறைப் பொருளாதாரத்தில் சமுதாயத்தின் மொத்தச் செலவு 1)நுகர்வு செலவு(C) 2)முதலீட்டு செலவு(I) 3)அரசின் செலவு(G) 4)வெளியாரின் செலவு(ஓ) (அதாவது ஏற்றுமதி போன்றவை) ஆகியவற்றின் தொகுப்பாகும். இது சமுதாயத்தின் வருவாயை ஒட்டி அமைகின்றது. வருவாய் கூடுகின்ற பொழுது தொகு தேவையையும் கூடுகின்றது. ஆனால் வருவாய் கூடும் விகிதத்தில் கூடுவதில்லை.

குறிப்பிட்ட வேலைவாய்ப்பு அளவில் உற்பத்தி செய்த பொருட்களைவ ிற்பனை செய்வதன் மூலம் தொழில்முயல்வோர்கள் எதிர்பார்க்கின்ற பணவருவாயை தொகுதேவை விலை என்று கூறுகின்றோம். பொருளாதாரத்தில் வேறுபட்ட தொகு தேவை விலைகள் இருக்கும்.

தொகு தேவைச் சார்பை வரைபடங்களின் மூலம் விளக்கலாம்.

முதலாவதாக, தொகு தேவையை தொகுப்பு நுகர்வோர் தேவையையும், தொகுப்பு முதலீட்டையும் கூட்டிப் பெறலாம் என்ற கருத்தினை விளக்கலாம். நுகர்வு வருவாய் அளவைச் சார்ந்திருப்பதால் இதனை c=a+by என்று கூறலாம். இதனால் ய என்பது வருவாயோடு தொடர்புடைய

நுகர்வையும் b என்பது வருவாயோடு தொடர்புடைய நுகர்வையும் குறிக்கின்றன. பின்வரும் வரைபடம் மொத்தத் தேவையைக் காட்டுகின்றது.




**வருவாய்(y)**

வரைபடத்தில் வருவாய் அளவு A புள்ளியில் சம நிலை இருக்கின்றது. இந்நிலையில் மொத்த வருவாயும் மொத்தச் செலவும் சமமாக இருக்கின்றன. அதாவது மொத்தத்தேவை, மொத்த வருவாய் அல்லது உற்பத்திக்குச் சமமாக உள்ளது. A புள்ளிக்கு இடது பக்க நிலையில் மொத்த செலவு மொத்த வருவாயைவிட அதிகமாக இருப்பது கவனிக்கத்தக்கது. அதாவது $45^0$ கோட்டில் தான் சமநிலை ஏற்படுகின்றது. A புள்ளிக்கு வலது பக்க நிலையில் மொத்தச் செலவு வருவாயை விடக் குறைவாக இருக்கின்றது. வருவாய் லு லிருந்து லுக்கு மாறுகின்ற பொழுது தொகு தேவையும் மாறுகின்றது. சமநிலை $யு_1$ புள்ளியில் ஏற்படுகின்றது.

இரண்டாவதாக, தொகு தேவை தேசிய உற்பத்தி அல்லது தேசிய வருவாய் அல்லது வேலையை சார்ந்திருக்கின்றதென்பதை ஒரு வரை படத்தின் மூலம் காட்டலாம்.

குறிப்பு




தேசிய வருவாய் அல்லது வேலைவாய்ப்புக் கூடுகின்றபொழுது தொகு தேவையும் கூடுகின்றது. ஆனால் அதே விகிதத்தில் அல்லவென்பதை வரைபடம் காட்டுகின்றது. வருவாய் $Y_1$ லிருந்து $Y_2$ ஆகக் கூடும்பொழுது விளைவுள்ள தேவை $E_1$ லிருந்து $E_2$ ஆகக் கூடுகின்றது.

முக்கியத்துவம் : தொகு தேவைக் கருத்து, தொகு தேவையில் ஏற்படும் மாற்றம் வருவாய் உற்பத்தியில் மாற்றத்தை ஏற்படுத்துமென்பதைக் காட்டுகின்றது. கெயின்ியன் உற்பத்தி அளவை விட வேலைவாய்ப்பு நிலைக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றார். ஆதலால் தான், எதிர்பாாக்கின்ற விற்பனை வருவாய்க்கும், வேலைசெய்யும் ஆட்களின் எண்ணிக்கைக்கும் உள்ள தொடர்பு உற்பத்தியின் அளவின் மூலம் அமைவதை விளக்குகின்றார். தொகு தேவைக் கருத்து முதலாளித்துவ சதாயத்தில் ஏன் பொருளாதார மந்தம் ஏற்படுகின்றதென்பதையும் விளக்குகின்றது. தொகு தேவை விளைவுள்ள தேவையை நிர்ணயிக்கின்றது. விளைவுள்ள தேவை உற்பத்தியையும் வேலைவாய்ப்பையும் நிர்ணயிக்கின்றது.

**மொத்த வழங்கல் சார்பு:** தொழில் முயல்வோர் ஒரு குறிப்பிட்ட அளவு உழைப்பிற்கு வேலை கொடுக்க வேண்டுானால் ஒரு குறிப்பிட்ட அளவு நிலம், தல் மூலப்பொருட்கள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். அவை அனைத்திற்கும் விலை அல்லது ஊதியம் வழங்க வேண்டு. ஆதலால், ஒவ்வொரு வேலை வாய்ப்பு நிலையும் இயல்பு ஆதாயத்தை உள்ளடக்கிய ஓர் உற்பத்தி பணச் செலவை ஒட்டி அமைகின்றது. தொகு அளிப்பு விலை என்பது குறிப்பிட்ட வேலை வாயப்பு நிலையில் உற்பத்திப் பொருளை விற்று கிடைக்கின்ற தேவையான வருவாய் அளவாகும். அதாவது தொகு அளிப்பு என்பது குறிப்பிட்ட காலத்தில் விற்பனைக்கு அளிக்கின்ற பொருட்கள், பணிகளின் மொத்த மதிப்பளவாகும். இது விலையையும், கூலியையும் ஒட்டி அமைகின்றது. கூலியை விட விலை அதிகமாக உற்பத்தி

குறிப்பு

செய்வார்கள். இதனால் முதலீடு கூட உற்பத்தியு, வருவாயும் பெருகும். ஆதலால் விலை முக்கியத்துவம் பெறுகின்றது.

தொகு அளிப்பு சார்பை கீழ்க்கண்ட வரைபடம் விளக்குகின்றது.




மொத்தப் பண செலவு கூடுகின்ற பொழுது தொகு அளிப்பும் கூடுவதை A S F வளைகோடு மேல்நோக்கிச் செல்வதைக் காட்டுகின்றது. Q புள்ளியில் OJ அளவு செலவும் ழுனு அளவு உற்பத்தியும் இருக்கின்றன. இது விலையின் அளவைப் பொருத்ததாகும். T புள்ளிக்கு மேல் தொகு அளிப்பு கூடாது கவனிக்கத்தக்கது. இதற்குமேல் உற்பத்தியை கூட்டமுடியாது. இது முழுநிறை வேலைவாய்ப்பு நிலையாகும். இதற்குமேல் தேவை கூடினால் பணவீக்கம் தான் ஏற்படும். தொகு தேவை குறைந்தால்விலை குறைய அளிப்பும் குறையும். ஆதலால் சமநிலை, முழுநிறை வேலைவாய்ப்புக்கு முன்பே குறைவான வேலைவாய்ப்பு நிலையில் ஏற்படலாம். இது முதலாளித்துவ சமுதாயத்தில் மந்த நிலை ஏற்படுவதை விளக்குகின்றது.

**தொகு தேவை தொகு அளிப்பு சமநிலை:** தொகு தேவையும், தொகு அளிப்பும் வேலைவாய்ப்பு, வருவாய் உற்பத்தி சமநிலையை தீர்மானிக்கின்றன. இதனை வரைபடம் காட்டுகின்றது.



குறிப்பு

வரைபடத்தில் யுனுகு$_1$ வளைகோடு தொகு தேவைச் சார்பையும் யுளுக தொகு தேவைச் சார்பையும் ASf விளைகோடு தொகு அளிப்பையும் காட்டுகின்றன. தொகுதேவைச் செலவையும் தொகு அளிப்பு விலையையும் சார்ந்துள்ளன. இரண்டும் E புள்ளியில் சந்திக்கின்றன. இந்நிலையில் வருவாய் Y நிலையில் இருக்கும். தொகுதேவை யுனுகு$_2$ ஆக உயருமானால் சமநிலை $E_1$ புள்ளிக்கு மாறும். வருவாய் $Y_1$ ஆகக் கூடும். இதே போல் தொகு அளிப்பு சார்பு மாறினாலும் வேலைவாய்ப்பு, வருவாய் உற்பததி ஆகியவற்றில் மாற்றம் ஏற்படுமென்பது கவனிக்கத்தக்கதாகும்.

முதலீடும், சேமிப்பும் சமமாக இருக்கின்றபொழுது தான் தொகுதேவையும் தொகு அளிப்பும் முழுநிறை வேலைவாய்ப்பில் சமநிலைப்படும் கெயின்ரீயன் சேமிப்பும் முதலீடும் சமநிலையில்தான் இருக்குமென்று கருதவில்லை. ஆதலால் முழுநிறை வேலைவாய்ப்பை அடையுமுன்பே அதாவது குறை வேலைவாய்ப்பு நிலையிலேயே தொகு தேவையும் தொகு அளிப்பும் சமமாக இருக்கலாமென்பதை விளக்குகினறார். இதனை வரைபடம் ஆறில் நு புள்ளி காட்டுகின்றது. இது குறைவான வேலை நிலைச் சமநிலையாகும். விளைவுள்ள தேவையின் பற்றாக்குறையால் இந்நிலை ஏற்படுகின்றது.

தொகு தேவைக் கோடும் தொகு அளிப்புக் கோடும் வெட்டுகின்ற இடம்தான் விளைவுள்ள தேவைப் புள்ளியாகும். இதில் உற்பத்தி அளவு செலவுக்குச் சமமாக இருக்கும். விளைவுள்ள தேவைக் கருத்தின் முக்கியத்துவம்: கெயின்ரீய பொருளாதாரத்தின் அச்சாணி கருத்தாக விளைவுள்ள தேவைகளில் இருந்து விளைவுள்ள தேவைதான் வேலைவாய்ப்பு நிலையை நிர்ணியக்கின்ற கெயின்ரீயன் விளைவுள்ள தேவையை உறுதிப்படுத்தினார். சே விதியை மறக்க இந்த கருத்தையே கெயின்ரீயன் பயன்படுத்தினார். வேலையில்லா திண்டாட்டம் பொருளாதார மந்தம் ஆகியவற்றைத் தீர்க்க இந்த வழிமுறைக் கூறுகிறது. சேமிப்புக கூட்டி நுகர்வு குறைவதற்கும் வேலையின்மை கூடும் என்பதற்கும் இந்தக் கருத்துக் கூறுகிறது.

## 5.5. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. கெயின்ரீயனின் பேரியல் பொருளாதாரக் கோட்பாட்டைப் பற்றிக் கூறுக.
2. கெயின்ரீயனின் பெருக்கிக் கருத்தை பற்றி வரையறு.

## 5. 6. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. கெயின்ரீயன் பொருளாதாரத்தை முழுமையானதாகப் பார்க்கின்றார். தனி நிறுவனத்தையோ தனித்தொழிலையோ பற்றி ஆராயமால், பொருளாதாரத்தின் மொத்த தொகுதியான நுகர்வு உற்பத்தி வருவாய் தேவை சேமிப்பு முதலீடு

குறிப்பு

ஆகியவற்றை ஆராய்கின்றார். இந்த வகையில் கெயின்ஸியப் பொருளாதாரம் தொகு பொருளியலாக அதாவது பேரியல் பொருளாதாரமாக ஔிர்கின்றது.

2. நுகர்வு விருப்பத்தோடு தொடர்புடையது. கெயின்ஸியன் பெருக்கிக் கருத்து தொடக்க முதலீட்டு இறுதியில் மொத்த வருவாயை பெருக்குகின்றதென்ற கருத்திற்கு வடிவம் கொடுத்ததன் மூலம் கெயின்ஸின் மரபு வழிச் சிந்தனையை மாற்றினார். தற்கால வேலைவாய்ப்பு வாணிபச்சுழல் கோட்பாட்டில் பெருக்கிசக் கருத்துச் சிறப்பாக இடமிருக்கின்றது.

## 5.7. சுருக்கம்

கெயின்ஸியனின் வேலைவாய்ப்புக் கோட்பாட்டின் மூலம் சமநிலை அளவு வேலைவாய்ப்புக் கருத்தினை தொகு அளிப்புச் சார்பு மற்றும் தொகு தேவை சார்பின் மூலம் விளக்கி, மொத்தத் தேவை மற்றும் மொத்த வழங்கல் செயல்பாட்டினையும் எடுத்துக் கூறுகின்றது.

## 5.8. முக்கிய வார்த்தைகள்

**குறைநிலை வேலைவாய்ப்புச் சமநிலை**

குறைந்த வேலைவாய்ப்பு நிலையில் பொருளாதாரம் சமநிலையில் இருக்குமென்று நிலை நாட்டியது ஆகும்.

**பணவீக்க பணவாட்ட இடைவெளிகள்**

பணவாட்ட இடைவெளி முழுநிறை வேலைவாய்ப்புக்குரிய தொகு தேவைக்கும் குறைவாக தொகு தேவை இருக்கின்ற பொழுது தோன்றுகின்றது. கெயின்ஸியனின் பணவீக்க இடைவெளியை போக்க முழுநிறை வேலைவாய்ப்புத் தொகு தேவையளவுக்கு நாட்டிலுள்ள தொகு தேவையைக் குறைக்க வேண்டுமென்றும் பணவாட்ட இடைவெளியை நீக்கத் தொகு தேவையைக் கூட்ட வேண்டும்.

## 5.9. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

### குறுகிய வினாக்களுக்கு விடையளி.

1. நீர்மை விருப்பக் கோட்பாடு என்றால் என்ன?
2. சமநிலை அளவு வேலைவாய்ப்பின் காரணிகள் யாவை?

### நெடு வினாக்களுக்கு விடையளி.

1.மொத்த தேவை மற்றும் மொத்த வழங்கல் செயல்பாடுகளை விவரி.

2.கெய்னிஸியனின் வெலைக் கோட்பாட்டின் நிர்ணயங்களைக் கூறுக.

## 5.10. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

1. ஃப்ரோ, எட்வர்ட்(2008), “பேரியல் பொருளாதார பகுப்பாய்வு” கலியோட்டியா பதிப்பகம், புது டில்லி.

குறிப்பு

# அலகு 6: நுகர்வு செயல்பாடு

**அமைப்பு:**

**6.1. பொருள்**

**6.2. நுகர்வு செயல்பாடு கோட்பாடுகள்**

**6.3. மூலதனத்தின் ஓரளவுத்திறன்(MEC)**

**6.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்**

**6.5. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்**

**6.6. சுருக்கம்**

**6.7 முக்கிய வார்த்தைகள்**

**6.8. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்**

**6.9. பரிந்துரைக்கப்படும் நூல்கள்**

## 6.1. பொருள்

வருவாய்க்கும் நுகர்வுக்கும் உள்ள தொடர்பை நுகர்வுச் சார்பு அல்லது நுகர்வு விருப்பக் கருத்து விளக்குகின்றது. இது கீன்சியப் பொருளாதாரத்தில் முக்கியமான கருத்தாகும். இதனை "இரு தொகுதிகளுக்கிடையில் அதாவது மொத்த நுகர்வுக்கும் மொத்த தேசிய வருவாய்க்கும் இடையிலுள்ள சார்பு நிலைத்தொடர்பு" என்று குரிஹாரா(மு.மு முரசனையசய) விளக்குகின்றார். இதனை ஊ-கு (ல) என்று குறியீடாகக் கூறலாம். இதில் ஊ நுகர்வையும் லு வருவாயையும் கஇ இரண்டுக்குமுள்ள சார்புநிலையையும் குறிக்கின்றது. இது மற்றவைகள் மாறமலிருக்கும் நிலையில் வருவாய் மாற்றத்திற்கேற்ப எப்படி நுகர்வு மாறுகின்றதென்பதைக் காட்டுகின்றது.

### 6.2. நுகர்வு செயல்பாடு கோட்பாடுகள்

**வருவாய் நுகர்வுத் தொடர்பு:** நுகர்வுச் செலவு வருவாயைச் சார்ந்து அமைகின்றது. வருவாய் கூடுகின்ற பொழுவு நுகர்வும் கூடுகின்றது. மிகவும் குறைந்தவருவாய் நிலையில்(பணமந்தம்) மக்கள் தங்களது நடப்பு வருவாய்க்கும் மேல் செலவிடுவார்கள். அதாவது உயிர்வாழ முந்திய சேமிப்பையும் செலவிடும் நிலையிருக்கும். வருவாய்கூடும் பொழுது நுகர்வுச் செலவைக் கூட்டுவார்கள். ஆனால் இது வருவாய் கூடும் வீதத்தில் அமையாது குறைவாகவே இருக்கும். இதனையே இறுதிநிலைநுகர்வு விருப்பம்(ஆயசபயைட ிசழிநளைவைல வழ ஊழளெரஅந) என்று கீன்ஸ் குறிப்பிடுகின்றார்.

குறிப்பு

**வருவாய்-நுகர்வுத் தொடர்பைக் கீழ்க்கண்ட பட்டியலின் மூலம் விளக்கலாம்.**

**நுகர்வுச் சார்புப் பட்டியல் (ரூபாயில்)**

| வருவாய் | நுகர்வு | சேமிப்பு |
|---|---|---|
| 100 | 100 | 0 |
| 150 | 140 | 10 |
| 200 | 175 | 25 |
| 250 | 205 | 45 |
| 300 | 225 | 75 |

நுகர்வுச் சார்புப் பட்டியல் வருவாய் கூடுகின்ற பொழுது நுகர்வு கூடுவதைக் காட்டுகின்றது. ஆனால் நுகர்வு வருவாய் கூடும் விகிதத்தில் கூடுவதில்லை வருவாய் கூடக்கூட சேமிப்பு மிகுதியாகக் கூடுகின்றது.

பொதுவாக வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள தொடர்புகள் எப்படி எல்லாம் அமையுமென்பதைக் கீழ்க்கண்ட வரைபடம் காட்டுகின்றது.




வரைபடத்தில் OX அச்சில் வருவாயையும் OY அச்சில் நுகர்வையும் அளக்கின்றோம். ழுஆ கோடு $45^0$ யில் அமைந்துள்ளது. ஒருவர் கூடுகின்ற வருவாயை எல்லாம் செலவிட்டு விடுவாரானால் அவருடைய நுகர்வுச்சார்பு OM ஆக இருக்கும். ஆனால், யாரும் 50மூ கூட்டுவதில்லை. அதனைவிடக் குறைவாகவே நுகர்வு கூடும். வருவாய் கூடுகின்ற பொழுது நுகர்வு மாறாமல் ஒரே விகிதத்தில் கூடினால் நுகர்வுக்கோடு ON ஆக இருக்கும். பொதுவாக நுகர்வு ஒரே விகிதத்தில் கூடுவதில்லை. தொடக்க நிலைகளில் வருவாய் கூடுகின்றபொழுது கூடுகின்ற வருவாயில் மிகுதியாக நுகர்வுக்கு

குறிப்பு

செசவிடுவார்கள். ஆனால் வருவாய் மேலும் மேலும் கூடுகின்றபொழுதுஇ அடிப்படைத் தேவைகள் நிறைவுபெற்ற நிலையில் வருவாய் கூடுமளவுக்கு நுகர்வு கூடாது கூடுகின்ற வருவாய் சேமிப்பை கூட்டும். ஆதலால் நுகர்வுக்கோடு ழீ ஆக இருக்க வாய்ப்பு உண்டு.

நடைமுறையில் மிகக்குறைந்த வருவாயில் ஒருவர் உயிர்வாழ ஓரளவு வாழ்க்கைத்தரத்தை நிலைநாட்ட வருவாய்க்கு மேலேயே செலவிடுவார். அதாவது முந்திய சேமிப்பை பயன்படுத்தியோ, கடன்பட்டோ வாழ்க்கையை நடத்துவார். ஓரளவு வருவாய் வருகின்றபொழுது வருவாயும் நுகர்வுக் செலவும் சமமமாக இருக்கும். இதற்கு மேல் வருவாய் கூடினால் நுகர்வு வருவாய்க்குள்ளிருக்கும். இதனைக் கீழ்க்கண்ட வரைபடம் காட்டுகின்றது.




வரைபடத்தில் படுக்கைகோட்டில் வருவாயையும் செங்குத்துக்கோட்டில் நுகர்வையும் அளிக்கின்றோம். $45^0$ கோடு வருவாய் நுகர்வுக்குச் சமநிலையில் இருப்பதனைக் காட்டுகின்றது. ஊ கோடு வருவாய் கூடும் பொழுது நுகர்வு கூடுவதைக் குறிக்கின்றது. டீ புள்ளியில் நுகர்வும் வருவாயும் (C =Y or OY1 OC) சமமாக இருக்கின்றன. அதற்கு முந்திய நிலையில் வருவாய்க்கும் மேல் நுகர்வுச் செலவு இருக்கின்றது வருவாய் ழுலு$_2$ ஆகக் கூடுகின்றபொழுது நுகர்வு ழுஊ$_2$ ஆகக் கூடுகின்றது ஆனால் கூடுகின்ற நுகர்வு வருவாய் கூடுதலைவிடக் குறைவாக ($Y_1$ $Y_2$> $C_1$ $G_2$) இருக்கின்றது. அதாவது செலவிடாத வருவாய்(ளுளுஇழ) சேமிக்கப்படுகின்றது. இந்த வகையில் நுகர்வுச் சார்பு நுகர்வை மட்டுமின்றி சேமிப்பையும் காணிப்பதைக் காணலாம்.

சேமிப்பு சார்பு: நுகர்வுச் சார்புக்கு நேர் எதிரானதாகும். வருவாய் கூடுகின்றபொழுது நுகர்வு குறைகின்றது. ஆனால் சேமிப்புக் கூடுகின்றது இறுதிநிலைச் சேமிப்பு விருப்பம் நிலையானதாக இருந்தால் சேமிப்புக்கோடு வரைபடத்தில் உள்ளவாறு அமையும்.

குறிப்பு




வரைபடத்தில் ழுளு சேமிப்புக்கோடு வருவாய் கூட சேமிப்புக் கூடுவதைக் காட்டுகின்றது.

நுகர்வுப் பணியைப் புரிந்து கொள்ள சராசரி நுகர்வு விருப்பம் இறுதிநிலை நுகர்வு விருப்பம் ஆகிய கருத்துக்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**சராசரி நுகர்வு விருப்பம்: (Average Propen sity to Consume)**

சராசரி நுகர்வு விருப்பம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்தில் மொத்த வருவாய்க்கும் உள்ள வீதமாகும். அதாவது எந்த ஒரு வருவாய் நிலையிலும் சராசரி நுகர்வு விருப்பத்தை நுகர்வை வருவாயால் வகுத்துக் கண்டுபிடிக்கலாம் இதனை சதவீதத்தில் கூறுவதுண்டு.

**அதாவது APC= $\frac{C}{Y}$(சராசரி நுகர்வு விருப்பம் = நுகர்வு/வருவாய்**

**சராசரி நுகர்வு விருப்பத்தைக் கீழ்க்கண்ட பட்டியலின் மூலமும் விளக்கலாம்.**

| வருவாய் Y | நுகர்வு C | சராசரிநுகர்வுவிருப்பம் APC=C/Y |
|---|---|---|
| 100 | 90 | 90.˙.100 0.90 90ழு |
| 200 | 170 | 170.˙.200 0.85 85ழு |
| 300 | 240 | 240.˙.300 0.80 80ழு |
| 400 | 300 | 300.˙.400 0.75 75ழு |
| 500 | 350 | 350.˙.500 0.70 70ழு |

பட்டியலில் வருவாய் கூடுகின்றபொழுது சராசரி நுகர்வுச் செலவு குறைந்து வருவதைப் பார்க்கின்றோம். இதனுடைய நேர் எதிர்கால சராசரி சேமிப்பு விருப்பமாகும் (APS) அதாவது வருவாய் கூடுகின்றபொழுது சேமிப்பு விருப்பம் கூடும் சராசரி நுகர்வு விருப்பம் உற்பத்தியின் மொத்தச் செலவில் எந்த வீதத்தை நுகர் பொருட்களை விற்பதன் மூலம் பெற முடியுமென்பதை

குறிப்பு

காட்டுகின்றது. வளர்ச்சிபெற்ற பொருளாதாரத்தில் சராசரி நுகர்வு விருப்பம் மிகுதியாகவும் இருக்கும்.

**இறுதி நிலை நுகர்வு விருப்பம்:(Marginal Propensity of Consume)**

மொத்த வருவாய் நிலையில் ஏற்படும் மாற்றத்தின் விளைவாக மொத்த நுகர்வில் ஏற்படும் மாற்ற வீதத்தை இறுதிநிலை நுகர்வு விருப்பம் என்று கூறுகின்றோம். அதாவது வருவாய் கூடுதலின் விளைவாகக் கூடும் நுகர்வாகும். இதனைக் கீழ்க்கண்டவாறு கூறலாம்.

**இறுதிநிலைநுகர்வு விருப்பம்(MPC)= ____________________**

**கூடுதல் நுகர்வு= கூடுதல் வருவாய;=Y**

அதாவது நுகர்வில் ஏற்படும் மாற்றத்தை வருவாயில் ஏற்படும் மாற்றத்தால் வகுத்தால் இறுதிநிலை நுகர்வு விருப்பம் கிடைக்கும். இந்தக் கருத்தைக் கீழ்க்கண்ட பட்டியலின் முலம் விளக்கலாம்.

| **வருவாய் Y** | **நுகர்வு C** | **இறுதிநிலை நுகர்வு விருப்பம் = C/Y** |
|---|---|---|
| 1,000<br>1,100<br>1,200<br>1,300<br>1,400 | 700<br>770<br>830<br>880<br>920 | **70/100 0.70 70%**<br>**60/100 0.60 60%**<br>**50/100 0.50 50%**<br>**40/100 0.40 40%** |

பட்டியலின் வருவாய் ரூ 1000 லிருந்த ரூ 1100 ஆக கூடும் பொழுது நுகர்வு ரூ 700 லிருந்து ரூ 770 ஆகக்கூடுகின்றது. இறுதிநிலை நுகர்வு விருப்பம் 0.70 அல்லது 70 சதவீதம் தொடர்ந்து வருவாய் கூடும்பொழுது இறுதி நிலை நுகர்வு விருப்பம் குறைந்து வருவதை பட்டியலிருந்து அறியலாம்.

வருவாய் கூடுகின்றபொழுது நுகர்வு கூடுகின்றது. ஆனால் வருவாய் கூடுவதைவிட குறைந்த விகிதத்திலேயே நுகர்வுச் செலவு கூடுகின்றது. என்ற கீன்சின் குரிஹாரா(முமு மரசரையசய) 1) குறைவேலைநிலை சம நிலைக்கான கருத்தியல் வாய்ப்பையும் 2) மிகவும் வளர்ச்சி பெற்ற தொழில் பொருளாதாரம்

சார்புநிலையில் மிகவும் நியைாக இருப்பதனையும் விளக்க இக்கருத்து பயன்படுகின்றதென்று கருதுகின்றார். இந்தக் கருத்து எப்படிப் பொருளாதாரத்தில் மிகை உற்பத்தி ஏற்படுகின்றதென்பதை விளக்கின்றது. மேலும் வளர்ச்சி பெற்ற பொருளாதாரத்தை நிலைப்படுத்தவதில் நுகர்வின் பங்கு என்னவென்பதையும் விளக்குகின்றது.

**சராசரி நுகர்வு விருப்பத்திற்கும் இறுதிநிலை நுகர்வு விருப்பத்திற்குமுள்ள தொடர்பு:**

இரண்டும் மிகவும் தொடர்புள்ள கருத்துக்களாகும் முதலாவதாக இறுதிநிலை நுகர்வு விருப்பம் நிலையாக இருந்தால் நுகர்வுச் சார்பு நேர்கோடாக இருக்கும்.கூடுகின்ற வருவாயை முழுக்கச் செலவிடுவதாக இருக்தால் சாரசரி நுகர்வும் நிலையாக இருக்கும். இரண்டாவதாக வருவாய் கூடுகிள்ற பொழுது இறுதிநிலை நுகர்வு விருப்பம் குறைகின்றது. ஆனால் சராசரி நுகர்வு விருப்பத்தைவிட மிகுதியாகக் குறைகின்றது. மூன்றாவதாக வருவாய் குறைகின்ற பொழுது இறுதிநிலை நுகர்வு விருப்பம் கூடுகின்றது சராசரி நுகர்வு விருப்பமும் கூடுகின்றது ஆனால் மெதுவாகவே கூடுகின்றது.

## 6.3.மூலதனத்தின் ஓரளவுத்திறன்(Marginal Effiency of Capital)

மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனின்(ஆநுஊ) என்பது புதிய மூலதனத்தின் மூலம் எதிர்பார்க்கின்ற ஆதாய வீதத்தை குறைக்கின்றது. அதாவது கூடுகின்ற மூலதன சொத்தினை பயன்படுத்தபடுவதற்காகும். செலவுக்கு மேல் கிடைக்கின்ற எதிர்பார்க்கும் ஆதாய விகிதம் முதலாவதாக மூலதனத்தின் இறுதி அலகை கவனிக்க வேண்டும். இரண்டாவதாக அதனுடைய செலவை அதனுடைய வருவாயிலிருந்து கழிக்க வேண்டும். அதாவது இறுதிநிலை ஆக்கத்தின் இரு காரணிகளை சந்திக்கிறது. முதலாவது மூலதனத்தில் இருந்து எதிர்பார்க்கின்ற வருவாய், இரண்டாவது மூலதனத்தின் அளிப்பு விலை இந்த இரு காரணிகளின் விகிதமே இறுதி ஆக்கத் திறனாகும்.

கெயின்ஙீயன் கருத்துப்படி, ஒரு மூலதனச் சொத்தினை எதிர்பார்க்கும் வருவாய் என்பது ஒரு சொத்திலிருந்து அதனுடைய வாழ்க்கைக்காலம் முழுவதும் எதிர்பார்க்கிறது. நிகர வருவாய் யாவும் ஒரு சொத்திலிருந்து கிடைக்கின்ற ஆண்டு வருவாய்களை சு$_1$, சு$_2$, சு$_3$ நவஉ….சு$_Q$. என்று குறித்தால் இவற்றையெல்லாம் கூட்டி சொத்தில் இருந்து மொத்தம் எதிர்பார்க்கும் வருவாயைக் கணக்கிடலாம். ஒருவர் முதலீடு செய்கின்ற பொழுது அதன் வருவாயை மட்டும் அல்ல அதனைப் பெறுவதற்கு ஆகின்ற செலவையும் கணக்கில் எடுத்துக் கொள்வது ஒரு முதலீட்டின் மூலம் எதிர்நோக்கும் வருவாயை அந்த முதலீட்டைப் பெறுவதற்குரிய செலவை விட மிகுதியாக இருந்தால் தான் ஒருவர் முதலீட்டை மேற்கொள்வார். கூட்டுகின்ற

குறிப்பு

முதலீட்டில் இருந்து அவருடைய செலவிற்கு மேல் எதிர்பார்க்கின்ற ஆதாயத்தை அல்லது வருவாயையோ கெயினீயன் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் என்கிறார்.

**இறுதிநிலை ஆக்கத்திறனை தீர்மானிக்கும் காரணிகள்:**

தனியார் பொருளாதார அமைப்பின் மூலதனத்தில் இறுதிநிலை ஆக்கத்திறனை பல்வேறு வகையான காரணிகள் பாதிக்கின்றன. அவற்றின் குறுகியகால காரணிகள், நீண்ட கால காரணிகள் என்று பகுத்தும் தொகுத்தும் கூறலாம்.

**(i)குறுகிய கால காரணிகளில் கீழ்கண்டவை முக்கியமானவைகளாகும்.**

**1. எதிர்நோக்கும் தேவைகள்:**

மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனை பெருமளவில் உற்பத்திச் செய்யும் பொருட்களுக்குரிய தேவையை ஒட்டி அமைகிறது. உற்பத்திச் செய்யும் பொருட்களுக்குரிய எதிர்காலத் தேவை மிகுதியாக இருக்குமென்று எதிர்பார்த்தால் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் அதிகமானதாக இருக்கும். இதனால் முதலீடு கூடும். எதிர்நோக்கும் தேவை குறைவாக இருக்குமென்று கருதினால் முதலீட்டைக் குறைப்பார்கள்.

**செலவுகளும் விலைகளும்:**

எதிர்கால செலவுகளும் விலைகளும் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத் திறனை நிர்ணயிக்கின்றன. எதிர்காலத்தில் செலவுகள் குறையுமென்றும் விலைகள் கூடுமென்றும் எதிர்பார்ாத்தால் மூலதனத்தின் இறுதிநிலைத் திறன் மிகுதியாக இருக்கும். இதனால் முதலீடு கூடும். மாறாக செலவுகள் கூடுமென்றும் விலைகள் குறையுமென்றும் எதிர்பார்த்தால் முதலீடு குறையும்.

**வருவாய் மாற்றம்:**

வருவாய் மாற்றத்தினால் தோன்றும் முடுக்கி மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனைத் தீர்மானிக்கிறது. வருவாய் கூடும்பொழுது முதலீடு கூடவும் வருவாய் குறைகின்ற பொழுது முதலீட்டை குறையவும் செய்கின்றது.

**நுகர்வு விருப்பம்:**

நுகர்வு விருப்பத்திற்கும் மூலதனத்தின் இறுதி ஆக்கத்திறனுக்கும் நேரடியாகத்தொடர்பு இருக்கிறது. நுகர்வு விருப்பம மிகுதியாக இருந்தால் இறுதிநிலை ஆக்கத்திறன் அதிகமாக இருந்து முதலீட்டைக் கூட்டும். மாறாக நுகர்வு விருப்பம் குறைந்தால் முதலீடு குறையும்.

**5. வரி விதிப்புகள்:**

அரசு மிகுதியாக வரி விதித்தால் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் குறைய முதலீடு குறையும். மாறாக வரிச் சலுகைகள் வழங்கினால் முதலீடு கூடும்.

**6.நடப்பு எதிர்பார்ப்புகள்:**

முதலீடு செய்பவர்கள் நடப்புக் காலத்தில் முதலீட்டினால் கிடைக்கும் வருமானத்தின் அடிப்படையில் எதிர்கால முதலீட்டை தீர்மானிப்பார்கள். நடப்பின் ஆதாயம் மிகுதியாக இருந்தால் முதலீட்டைக் கூட்டுவார்கள்.

குறிப்பு

**7.பொதுச் செலவு:**

அரசு செலவிடும் தொகையை கூட்டினால் பெருக்கியின் விளைவாக மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனை உயர முதலீடு கூடும். மாறாக பொதுச்செலவு குறைந்தால் முதலீடு குறையும்.

**8.நீர்மைத் தன்மையுள்ளச் சொத்துக்கள்:**

நிர்வாகங்களிடம் இருந்து நீர்மைத் தன்மையுள்ள சொத்துக்கள் மிகுதியாக இருந்தால் முதலீடு அதிகமாக இருக்கும். அப்படிப்பட்ட நிலை இல்லாவிட்டால் முதலீடு குறையும்.

**9.வாணிப நிலைகள்:**

வாணிபம் செழிக்கும் என்று கருதினால் முதலீட்டைப் பெருக்குவார்கள். வாணிபம் மந்தமடையும் என்று கருதினால் முதலீட்டில் ஆர்வம் குறையும்.

**(ஹை)நீண்டகால காரணிகளாக சிலவற்றைக் கூறலாம்.**

**1.புதிய பகுதிகளின் முன்னேற்றம்:**

ஒரு நாடு தன்னோடு சேர்ந்த புதிய பகுதிகளை முன்னேற்றுகின்ற பொழுது போக்குவரத்து, மின்சாரம், நீர்பாசனம், வேளாண்மை தொழில்கள் போன்றவற்றிற்கு நிறைய முதலீடு செய்வார்கள்.

**2.மக்கள் தொகைப் பெருக்க வீதம்:**

மக்கள் தொகை வெகமாக கூடுகின்ற பொழுது மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் கூடும். மக்கள்தொகை பெருக்கத்தால் எல்லா பொருட்களின் தேவையும் கூடும். இதனால் முதலீடு கூடும். மக்கள் தொகை குறைந்தால் முதலீடு குறையும்.

**3.நடப்பு முதலீட்டின் விகிதம்:**

ஒரு குறிப்பிட்ட தொழில் இருக்கின்ற நடப்பு முதலீட்டு விகிதத்திற்கும் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனிற்கும் நேரடித் தொடர்பு இருக்கிறது. நடப்பு முதலீடு நிறைய இருந்தால் மேலும் முதலீடு செய்ய மாட்டார்கள். மாறாக நடப்பு முதலீடு குறைவாக இருந்தால் முதலீடு செய்ய தூண்டுதல் கிடைக்கும்.

**4.இருக்கின்ற மூலதனக் கருவிகனின் ஆக்கத்திறன்:**

இருக்கின்ற தொழில் நிறுவனங்களில் உள்ள மூலதனக் கருவிகளை முழுமையாக பயன்படத்தாமல் இருந்தால் பொருள்களுக்கு தெவை கூடும்பொழுது முதலீடு கூடாது.மூலதனக் கருவிகளை முழுமையாக பயன்படுத்துவார்கள். மூலதனக் கருவிகளை முழுமையாக பயன்படுத்திய நிலையில் தேவை கூடினால் முதலீடும் கூடும்.

குறிப்பு

**5.தொழில்நுட்ப முன்னேற்றம்:**

புதிய கருவிகளைக் கண்டுபிடிப்பதும், உற்பத்தியில் தொழில் நுட்ப முன்னேற்றங்களை ஏற்படுத்துவதும் முதலீட்டின் தேவையைக் கூட்டும். ஆதலால் முதலீடு கூடும்.

**திறனாய்வு:**

கெயின்ரீயனின் மூலதனத்தின் இறுதிநிலைத்திறன் கருத்தில் திறனாய்வாளர்கள் சில குறைகளை சுட்டிக் காட்டுகின்றனர். முதலாவதாக கெயின்ரீயன் மூலதனத்தின் இறுதிநிலைத் திறன் என்னும் சொல்லை பல இடங்களில் வேறுபொருள்களில் பயன்படுத்துவதால் அதனைச சரியாக புரிந்து கொள்வதில் சிக்கல்கள் இருப்பதாக கூறுகின்றனர். இரண்டாவதாக எதிர்பார்ப்புகளால் வட்டி விகிதமும் பாதிக்கப்படுவதை கெயின்ரீயன் கவனிக்கத் தவறி விட்டார் என்று சுட்டிக் காட்டினர்.மொத்தத்தில் இது தெளிவற்ற உறுதியற்ற கருத்தென்றும் கூறுகின்றார்கள். ஆதலால் முதலீட்டை நிர்ணயிப்பதில் இறுதிநிலை ஆக்கத் திறனுக்குரிய முக்கியத்துவம் முற்றிலும் மறுக்க இயலாது.

## 6.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. சராசரி நுகர்வு விருப்பம் (யுளநசயபந ீசழிநெ ளவைல வழ ஊழளெரஅந) என்றால் என்ன?

2. இறுதி நிலை நுகர்வு விருப்பம்:(ஆயசபையெட ீசழிநளெவைல ழக ஊழளெரஅந) என்றால் என்ன?

## 6.5. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** சராசரி நுகர்வு விருப்பம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்தில் மொத்த வருவாய்க்கும் உள்ள வீதமாகும். அதாவது எந்த ஒரு வருவாய் நிலையிலும் சராசரி நுகர்வு விருப்பத்தை நுகர்வை வருவாயால் வகுத்துக் கண்டுபிடிக்கலாம் இதனை சதவீதத்தில் கூறுவதுண்டு.

**அதாவது யீஊஸ்ரீ $\frac{C}{Y}$(சராசரி நுகர்வு விருப்பம் ஸ்ரீ நுகர்வு.ீ.வருவாய்**

**2.** மொத்த வருவாய் நிலையில் ஏற்படும் மாற்றத்தின் விளைவாக மொத்த நுகர்வில் ஏற்படும் மாற்ற வீதத்தை இறுதிநிலை நுகர்வு விருப்பம் என்று கூறுகின்றோம். அதாவது வருவாய் கூடுதலின் விளைவாகக் கூடும் நுகர்வாகும். இதனைக் கீழ்க்கண்டவாறு கூறலாம். **இறுதிநிலைநுகர்வு விருப்பம்(ஆீஊ)ஸ்ரீ கூடுதல் நுகர்வு.ீ.கூடுதல் வருவாய்**

குறிப்பு

## 6.6. சுருக்கம்

வருவாய்க்கும் நுகர்வுக்குமான தொடர்பினை விளக்கி இறுதிநிலை நுகர்வு விருப்பம் நுகர்வு மற்றும் வரவாயைப் பொறுத்து எவ்வாறு மாறுபடுகின்றது என்றும் மூலதனத்தின் ஓரளவுத் திறனைக் கணக்கிட்டு முதலீட்டை மேற்கொள்வதற்கும் பொருளாதாரத்தில் இறுதிநிலை ஆக்கத்திறனை தீர்மானிக்கும் காரணிகளையும் கணக்கிடலாம்.

## 6.7 முக்கிய வார்த்தைகள்

**மூலதனத்தின் ஓரளவுத் திறன்:** மூலதனத்தின் ஓரளவுத் திறன்(MEC) என்பது புதிய மூலதனத்தின் மூலம் எதிர்பார்க்கின்ற ஆதாய வீதத்தை குறைக்கின்றது. அதாவது கூடுகின்ற மூலதன சொத்தினை பயன்படுத்தப் படுவதற்காகும்.

**மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன்:** ஒரு முதலீட்டின் மூலம் எதிர்நோக்கும் வருவாயை அந்த முதலீட்டைப் பெறுவதற்குரிய செலவை விட மிகுதியாக இருந்தால் தான் ஒருவர் முதலீட்டை மேற்கொள்வார். கூட்டுகின்ற முதலீட்டில் இருந்து அவருடைய செலவிற்கு மேல் எதிர்பார்க்கின்ற ஆதாயத்தை அல்லது வருவாயையோ கெயினீயன் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் என்கிறார்.

## 6.8. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

### குறுகிய வினாக்களுக்கு விடையளி.

1.இறுதிநிலை நுகர்வு விருப்பம் என்றால் என்ன?

2.சேமிப்புச் சார்பு என்றால் என்ன?

### 2.நெடுவினாக்களுக்கு விடையளி.

1. நுகர்வுச் செயல்பாட்டுக் கோட்பாடுகளை விவரி.
2. மூலதனத்தின் ஓரளவுத் திறனையும், இறுதிநிலை ஆக்கத் திறனைத் தீர்மானிக்கும் காரணிகளையும் பற்றிக் கூறுக.

## 6.9. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

1. சேத், ஆ.டு (1999), ஔபேரியல் பொருளாதாரம்'', லக்'மி நாராயணன் அகர்வால் பப்ளி'ர்ஸ், புது டெல்லி.

குறிப்பு

# அலகு 7: முதலீட்டு செயல்பாடு

**அமைப்பு:**



## 7.1. பொருள்

"முழுநிறை வேலை நிலைக்கு மிகவும் இன்றியமையாத தேவை முதலீடாகும். முதலாளித்துவப் பொருளாதாரத்தில் அதுதான் வளத்தின் திறவுகோலாக இருக்கின்றது" என்று கென்னத் குரிகுரா குறிப்பிடுகின்றார். விளைவுள்ள தேவையைச் சார்ந்தே நாட்டின் வேலைவாய்ப்பு, உற்பத்தி, வருவாய் அமைகின்றது. விளைவுள்ள தேவை நுகர்வையும் முதலீட்டையும் சார்ந்துள்ளது. நுகர்வு குறுகிய காலத்தில் ஏறத்தாழ நிலையாக உள்ளது. ஆதலால். முதலீட்டைக் கூட்டுவதன் மூலமாகத்தான் வேலைவாய்ப்பைக் கூட்ட வேண்டியுள்ளது. இந்த அடிப்படையில் கீன்ஸ் முதலீட்டை ஆற்றல் மிக்க முக்கிய மாறியாகக் ஜஅுவசயவநபைஉ ஏயசயையடிடநஸ கருதுகின்றனர்.

**கருத்து விளக்கம்:** ஒரு குறிப்பிட்ட காலத் திட்டத்தில் புதிய கட்டுமானங்களாகவும், புதிய மூலதன கருவிகளாகவும் வாணிப இருப்புக் கருவிகளில் தோனறும் மாற்றங்களாகவும் ஏற்படுபவற்றின் மதிப்பை முதலீடு என்கின்றோம். இதனை மொத்த முதலீடாகவும், நிகர முதலீடாகவும் பிரித்துப் பார்க்கலாம். மொத்த முதலீட்டில் மாற்ற வேண்டிய முதலீட்டைக் கழித்து விட்டால் நிகர முதலீட்டை அறியலாம்.

பொதுவாக, பங்கு அங்காடியில் கிடைக்கின்ற பங்குகளை, பத்திரங்களை வாங்குன்ற பொழுது நாம் முதலீடு செய்வதாகக் கருதுகின்றோம். ஆனால் இதனை உண்மையான முதலீடு என்று கூற முடியாது. ஏனென்றால், பங்குகளையும் பத்திரங்களையும் வாங்குகின்ற பொழுது, இருக்கின்ற சொத்துக்கள் கை மாறுகின்றனவே தவிர மொத்த

குறிப்பு

முதலீடு மாறுவதில்லை. ஆதலால் இதனை நிதிமுதலீடு ஜகுயையெஉெயைட ஐஎெநளவஅநவெஸ என்கின்றோம்.

கீன்ஸ் உண்மையான முதலீட்டையே, முதலீடு என்கின்றார். உண்மையான முதலீடு முலதனக் கருவிகளின் இயல்பைக் கூட்டுகின்றது. இத்தகைய முதலீடு மூலதனப் பொருட்களின் உற்பத்தியையும், வாங்குதலையும் அதிகரிக்கின்றது. இதனால் வருவாய் நிலையும், உற்பத்தி அளவும் கூடுகின்றது. அதாவது புதிய கருவிகள், எந்திரங்கள், அணைகள், சாலைகள், கட்டிடங்கள் போன்று கட்டப்பெறுகின்ற பொதுப்பணிப்படைப்புக்கள் தொழில், வாணிபத்தைத் தொடங்கி நடத்த மேற்கொள்ளும் செலவுகள் ஆகியவை எல்லாம் உண்மையான முதலீட்டில் அடங்குகின்றன. ஜோன் ராபின்சன் (துழயஎ சுழடிைளெழஎ) “புதியவீடு கட்டுவது, புதிய தொழிற்சாலைகளைக் கட்டுவது மூலமாக மூலதனத்தைக் கூட்டுவதை முதலீடு என்கின்றோம். முதலீடு என்பது இருக்கின்ற பொருட்களின் இருப்பைக் கூட்டுவதாகும்”, என்கின்றார்.

## 7.2. வகைகள்

**1. நிதி முதலீடு, உண்மை முதலீடு:**

நடைமுறையில் முதலீடு என்பது நிதி முதலீட்டைக் குறிக்கும். அங்காடியில் ஏற்கெனவே உள்ள பங்குகளையும், கடன் பத்திரங்களையும் வாங்குவது நிதி முதலீடு (குயையெஉெயைட ஐஎெநளவஅநவெ) எனப்படும். இவை மூலதன இருப்போடு எதையும் அதிகமாக சேர்ப்பதில்லை. இவைகளை வாங்கும்போது இருக்கின்ற சொத்துக்கள் கைமாறுகின்றனவே தவிர மொத்த முதலீடு மாறுவதில்லை. நிதி முதலீட்டை பொதுவாக தனியார் மேற்கொள்ளுகின்றனர்.

வேலைவாய்ப்பு மற்றும் உற்பத்தியை நேரடியாகக் கூட்டுகின்ற இயந்திரங்கள், தொழிற்சாலை கட்டிடங்கள், கச்சாப் பொருட்கள் ஆகிய மூலதனப் பொருட்களை உருவாக்குவதே உண்மை முதலீடு(சுநயட ஐஎெநளவஅநவெ) என்கிறோம். ஏனெனில் இதனால் வருவாய் நிலையும், உற்பத்தியின் அளவும் கூடுகின்றது. உண்மை முதலீடானது இருக்கக்கூடிய சொத்துக்களின் இருப்பையும், உற்பத்தித் திறனையும் அதிகரிக்கின்றது. கீன்ஸ் கருத்துப்படி, முதலீடு என்பது உண்மை முதலீட்டையே குறிக்கும். பொதுவாக தேசிய நலனுக்காக நிறுவனங்களும், தொழில் முனைவோர்களும் உண்மை முதலிட்டை மேற்கொள்ளுகின்றனர்.

**2. மொத்த முதலீடு நிகர முதலீடு:**

ஒரு குறிப்பிட்ட காலத்தில் பொருளாதாரத்தில் உள்ள மொத்த முதலீடு(புசழளள ஐஎெநளவஅநவெ) எனப்படும். மொத்த முதலீட்டில் ($I_g$)

குறிப்பு

நிகர முதலீடும் ($I_n$) தேய்மானத்திற்காக மாற்றம் செய்யப்பட்ட முதலீடும்($I_r$) அடங்கும்.

$$I_g = I_n + I_r$$

பொருளாதாரத்தில் இருக்கும் மூலதன இருப்பில் உரு குறிப்பிட்ட ஆண்டில் ஏற்பட்ட மூலதன அதிகரிப்பே நிகர முதலீடு (நேவ ஐளெநளவஅநவெ) எனப்படும். நுகர்வுப் பண்டங்களின் தேவை அதிகரிக்கும்போது மூலதனப் பொருட்கள் அளவுக்கு அதிகமாக பயன்படுத்தப்பட்டதின் காரணமாக அவை தேய்மானம் அடைந்திருக்கும். மொத்த முதலீட்டிலிருந்து ($I_g$) தேய்மானத்திற்காக மாற்றம் செய்யப்பட்ட முதலீட்டை () கழித்து விட்டாய் எஞ்சியிருப்பது நிகர முதலீடாகும்.( $I_n$)

$$I_n = I_g - I_r$$

**3.தன்னிச்சையான முதலீடு, தூண்டப்பட்ட முதலீடு:**

முதலீட்டை தன்னிச்சையான முதலீடு(யுரவழழெஅழரள ஐளெநளவஅநவெ), தூண்டப்பட்ட முதலீடு (ஐனெரஉநன ஐளெநளவஅநவெ) என இரு வகையாக ஹிக்ஸ் பிரித்துள்ளார். வருவாய் மற்றும் உற்பத்தி நிலைகளைச் சாராமல் மேற்கொள்ளக் கூடிய முதலீடு தன்னிச்சையான முதலீடு எனப்படும். இது வருமான நெகிழ்ச்சியற்றது. வருவாய் மாற்றங்களால் இத்தகைய முதலீடு பாதிக்கப்படுவதில்லை. இத்தகைய முதலீடு லாப நோக்கில்லாமல் ஏற்படுகிறது. தொழில் நுணுக்க மாற்றங்கள், பருவகால மாற்றங்கள், போர் போன்ற புறக்காரணிகளால் ஏற்படுகின்றது. ஆனால் இது தேவை மாற்றங்களால் பாதிக்கப்படுவதில்லை. மாறாக, இது தேவையை மாற்றுகின்றது.சாலை போக்குவரத்து, தபால் தந்தி, மின்சாரம், மருத்துவமனைகள் போன்ற திட்டங்களில் அரசால்மேற்கொள்ளப்படும் முதலீட்டுச் செலவுகள் தன்னிச்சையான முதலீட்டிற்கு எடுத்துக் காட்டுகளாகும். பொதுவாக தானே ஏற்படும் முதலீடு பொதுத்துறை முதலீடாக இருக்கும்.

தன்னிச்சையான முதலீடுக் கோடானது (IA) X- அச்சுக்கு இணையாக உள்ளது. ஏனெனில் பல வருவாய் நிலைகளில் இந்த முதலீடு மாறாமல் நிலையாக உள்ளது.

குறிப்பு




இலாப நோக்கத்தோடு மேற்கொள்ளப்படும் முதலீடு துண்டப்பட்ட முதலீடு எனப்படும். துண்டபட்ட முதலீடு வருவாய் சார்புடையதாகும். அதாவது வருமான நெகிழ்ச்சியுடையதாகும். இத்தகைய முதலீடு வருவாய் மாற்றங்களால் பாதிக்கப்படுகிறது. மூலாதானத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் மாறாமல் இருக்கும் போது வருவாய் அதிகரித்தால் மொத்தத் தேவை அதிகரித்து அதன் விளைவாக முதலீடும் அதிகரிக்கின்றது. சுருங்கக்கூறின், வருவாய் அதிகரிக்கும் போது முதலீடும் அதிகரிகின்றது. வருவாய் முறையும் போது முதலீடும் குறைகின்றது.

தூண்டபட்ட கோடானது (II) வரைபடத்தில் காட்டியுள்ளது போல் இடமிருந்து வலமாக மேல் நோக்கிச் செல்லும் கோடாக உள்ளது. வருவாய் பூஜ்ஜ ஆக இருக்கும் போது முதலீடு இல்லை. வருமானம் OM ஆக இருக்கும் போது முதலீடு AM ஆக இருக்கின்றது. வருமானம் ON ஆக அதிகரிக்கும் போது BN ஆக அதிகரிக்கின்றது. பொதுவாக துண்டப்பட்ட முதலீட்டு தனியார் முதலீடாக இருக்கின்றது.

குறிப்பு




**4.திட்டமிட்ட முதலீடு திட்டமிடாத முதலீடு, முடிவு பெற்ற முதலீடு:**

திட்டமிட்ட முதலீடு (planned or Exante Investment) என்பது தொழில் முயல்வோர்கள் முதலீடு செய்ய எதிர்பார்க்கின்ற முதலீடானது அளவைக் குறிக்கின்றது. திட்டமிட்ட முதலீடானது எதிர்பார்க்கும் முதலீடு எனவும் அழைக்கப்படுகிறது. இவ்வகை முதலீடு குறியிலக்குகளின் (வயசபநவள) அடிப்படையில் அமைகின்றது. அமோக விற்பனை அல்லது சாதகமான அங்காடி சூழ்நிலையானது திட்டமிட்ட முதலீட்டை நிர்ணயிக்கிறது. (நல்ல விலை, இலாபம்).

திட்டமிடாத முதலீடு (Unplanned Investment) என்பது தொழில் முயல்வோர்கள் எதிர்பாராமல் மேற்கொள்ளும் முதலீட்டைக் குறிக்கின்றது. குறியிலக்குகள் இல்லாமல் இவ்வகை முதலீடு அமைகின்றது. மோசமான விற்பனையினால் பொருள்தேக்கம் ஏற்படும் போது முதலீடு நடைபெறுகின்றது.

முடிவு பெற்ற முடிவு பெற்ற (நுஒிழளவ ஐளெநளவஅநவெ) என்பது மேற்கொள்ளபட்ட முதலீட்டை(சுநயடளைநன ஐளெநளவஅநவெ) குறிக்கின்றது. வணிக நிறுவனங்களின் முதலீடு எதிர்பார்க்கும் முதலீடாக (நுஒயவெந ழச யுவெைஉியவநன ஐளெநளவஅநவெ) இருக்கலாம் அல்லது மேற்கொள்ளபெற்ற முதலீடாக இருக்கலாம். இவ்வரு முதலீடுகளும் எல்லாச் சமயங்களிலும் ஒன்றாக இருப்பதில்லை. ஏனெனில் சமுதாயத்தில் முதலீட்டாளர்கள் வேறாகவும் சேமிப்பவர்கள் இருக்கின்றனர். சேமிப்பவர்களின் தீர்மானங்களும் முதலீட்டாளர்களின் தீர்மானங்களும் தொடர்பின்றி அமைகின்றன. எனவே எதிர் பார்க்கும் முதலீடும் உண்மை வேறுபடுகின்றன.

குறிப்பு

**5.தனியார் முதலீடு, பொதுத்துறை முதலீடு:**

தனிநபர்களும், வணிக நிறுவனங்களும் இலாப நோக்கத்தோடு மேற்கொள்ளும் முதலீடு தனியார் முதலீடு(ீசளையவந ஐளெநளவஅநவெ) எனப்படும். இயந்திரங்கள், தொழிற்சாலைக் கட்டிடங்கள் போன்றவற்றில் தொழில் முயல்வோர்கள் மேற்கொள்ளும் முதலீடு தனியார் முதலீடு எனப்படும். தனியார் முதலீடானது மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் மிகுதியாகவும்வட்டி வீதம் குறைவாகவும் இருக்கும் போது தனியார் முதலீடு அதிகரிக்கும்.

இலாப நோக்கில்லாமல் நாட்டு நலனைக் கருதி அரசு மேற்கொள்ளும் முதலீடுகள் பொதுத்துறை முதலீடுகள் (ீரடிடளை ைஐளெநளவஅநவெ) எனப்படும். சாலைகள், பள்ளிகள், இருப்புப் பாதைகள் அணைக்கட்டுகள் ஆகியவற்றில் அரசு மேற்கொள்ளும் செலவுகள் பொதுத்துறை முதலீட்டிற்கு எடுத்துக்காட்டுகளாகும். தற்காலத்தில் சில பொதுத்துறை முதலீடுகள் இலாப நோக்கத்தோடும் மேற்கொள்ளப்படுகின்றன.

## 7.3.முதலீட்டுத் தீர்மானங்கள்

தனியார் முதலீட்டைத் தூண்டுகின்ற காரணிகள் பல்வேறு வகையாக உள்ளன. நீண்டகாலத்தில் சமுதாய, பொருளாதார பண்பாட்டுக் காரணிகள் முதலீட்டைப் பாதிக்கின்றன. கீன்ஸ் குறுகிய காலத்தில் மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறனும் வட்டிவீதமும் முதலீட்டை நிர்ணயிப்பதாகக் கருதினார். இவற்றைத் தனித்தனியாக விரிவாகப் பின்னால் பார்க்கலாம். ஆனால் பொதுவாக முதலீட்டை நிர்ணயிக்கும் காரணிகளை தொகுத்துக் கூறலாம்.

**வட்டி வீதம்:** முதலீடு வட்டிவீதத்தைச் சார்ந்துள்ளது. வட்டி வீதத்தை ரொக்க (நீர்மை) விருப்பம் நிர்ணயிக்கின்றது. குறைந்த வட்டிக்குக் கடன் கிடைத்தால் முதலீட்டைக் கூட்டுவார்கள். பணத்தின் தேவையும் அளிப்பும் வட்டிவீதத்தைத் தீர்மானிக்கின்றன.

**மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன்:** முதலீடு கூடுவதன் மூலம் எதிர்பார்க்கின்ற ஆதாயத்தை இறுதிநிலை ஆக்கத்திறன் குறிக்கின்றது வட்டி வீதத்தைவிட இறுதிநிலை ஆக்கத்திறன் மிகுதியாக இருக்கின்ற வரை முதலீட்டைக் கூட்டுவார்கள்.

**மூலதனப் பொருட்களின் இருப்பு:** மூலதனப் பொருட்கள் மிகுதியாக இருந்தால் முதலீட்டை கூட்டமாட்டார்கள். எச்ச நிலையில் மூலதனக் கருவிகள் இருந்தால் அவற்றை முழுமையாகப் பயனபடுத்துவார்களே தவிர முதலீட்டைக் கூட்டமாட்டார்கள்.

குறிப்பு

**வருவாய் நிலை:** நாட்டின் வருவாய் கூடுகின்ற பொழுது, நுகா்வு கூடும். இதனால் பொருட்களின் தேவைகூட முதலீடு தூண்டுதல் அடையும்.

**வாணிப எதிர்பார்ப்புகள்:** எதிர்காலத்தில் ஆதாயம் நிறையக் கிடைக்குமென்று எதிர்பார்த்தால் முதலீட்டைக் கூட்டுவார்கள், இல்லையேல் முதலீட்டைக் குறைப்பார்கள்.

**நுகர்வோர் தேவை:** நாட்டின் நுகர்வோரின் தேவை கூடினால் முதலீடும் கூடும். எதர்காலத்தில் தேவை கூடுமென்று எதிர்பார்த்தாலும் முதலீடு கூடும் ஆனால் தேவை குறைந்தால் முதலீடு குறையும்.

**நீர்மைத் தன்மை சொத்துக்கள்:** நிறுவனங்களில் பகிர்ந்து கொடுக்காத ஆதாயம், ஒதுக்கு நிதிகள் போன்றவை மிகுதியாக இருந்தால் முதலீடு கூடும். நீர்த்தன்மையுள்ள சொத்துக்கள் குறைவாக இருந்தால் முதலீடு குறையும்.

**கண்டு பிடிப்புக்களும் புத்தாக்கங்களும்:** உற்பத்தி செலவைக் குறைக்கக் கூடிய கண்டுபிடிப்புக்களும் மிகுதியாக தோன்றினால் முதலீட்டைக் கூட்டுவார்கள்.

**புதிய பொருட்கள்:** புதுப்புது பொருட்களை குறைந்த செலவில் உற்பத்தி செய்து அதிக விலைக்கு விற்பனை செய்யும் வாய்ப்பு இருந்தால் முதலீடு கூடும்.

**மக்கள் பெருக்கம்:** மக்கள் தொகை பெருகுகின்ற பொழுது எல்லா வகையான பொருட்களும் தேவை கூடும். இதனால் முதலீடு உயரும்.

**அரசின் கொள்கை:** அரசு குறைவாக வரி விதித்தால் முதலீடு கூடும்.

**அரசியல் சூழல்:** நாட்டின் அமைதியான அரசீயல் சூழ்நிலை முதலீட்டைக் கூட்டும். நாட்டில் போராட்டங்களும் கலகங்களும் இருந்தால் முதலீடு குறையும்.

## 7.4. மூலதனத்தின் முதலீட்டுத்திறன்(MEI)

**பணம் சந்தை சமநிலை மற்றும் டுஆ வளைகோடு :**

நிதிச் சந்தை, பணம், பத்திரங்கள் மற்றும் பிற வருவாய், வருவாய் சொத்துக்களை விற்பனை செய்யப்படும் சந்தையை குறிக்கிறது. இங்கே நாம் பணச் சந்தைக்கு நம்மை கட்டுப்படுத்துகிறோம். பணம் சந்தையில் சமநிலையைப் பற்றிக் கொள்வதற்கு நாம் சந்தையின் இரண்டு பக்கங்களையும், விநியோக பக்கத்தையும் கோரிக்கை பக்கத்தையும் குறிக்க வேண்டும். பணம் (ஆ) மத்திய வங்கியால் தீர்மானிக்கப்படுகிறது. எனவே எம் நிலைக்கு கொடுக்கப்பட வேண்டும் என்று கருதுகிறோம். வட்டி விகிதம் மற்றும் உண்மையான வருவாயின் ஒரு பணமாக பணத்திற்கான கோரிக்கையை காட்டுகிறது. படம். பணம் கோரிக்கைச் செயல்பாடு L=KPY K,h,0 அளவுருக்கள் மற்றும் ஆகியவை முறையே வருமானம் (Y) மற்றும்

குறிப்பு

வட்டிவிகிதம் (r) ஆகியவற்றிற்க்கான பணத்திற்கான தேவையை உணர்த்துகின்றன. இங்கு KPY என்பது பணத்திற்கான பரிவர்த்தனை. முன்னெச்சரிக்கை கோரிக்கை மற்றும் HR உள்ள கோரிக்கை ஆகும். பணத்திற்க்கான கோரிக்கை (பணப்புழக்க விருப்பம்). வட்டி விகிதத்தின் செயல்பாடு என வரையறுக்கப்படுகிறது.

வட்டி விகிதம் அதிகமானால் நிலையான அளவு வருமானத்தில் குறைந்த அளவு பணம் தேவைப்படுகிறது. வருமானத்தில் அதிகரிப்பு பணத்திற்கான தேவை எழுப்புகிறது. இது பணம் கோரிக்கை. அட்டவணையில் ஒரு வலதுசாரி மாற்றத்தால் காண்பிக்கப்படுகிறது.




(a)




(b)



குறிப்பு

**வருமானம் வெளியீடு**

**இரண்டுச் சந்தைகளின் சமநிலையற்றத் தன்மை**




## 7.5. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. விளைவுள்ள தேவை எவற்றைச் சார்ந்துள்ளது.?
2. தன்னிச்சையான முதலீடு என்றால் என்ன?

## 7.6. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. விளைவுள்ள தேவையைச் சார்ந்தே நாட்டின் வேலைவாய்ப்பு, உற்பத்தி, வருவாய் அமைகின்றது. விளைவுள்ள தேவை நுகர்வையும் முதலீட்டையும் சார்ந்துள்ளது.
2. வருவாய் மற்றும் உற்பத்தி நிலைகளைச் சாராமல் மேற்கொள்ளக் கூடிய முதலீடு தன்னிச்சையான முதலீடு எனப்படும். இது வருமான நெகிழ்ச்சியற்றது. வருவாய் மாற்றங்களால் இத்தகைய முதலீடு பாதிக்கப்படுவதில்லை. இத்தகைய முதலீடு லாப நோக்கில்லாமல் ஏற்படுகிறது. தொழில் நுணுக்க மாற்றங்கள், பருவகால மாற்றங்கள், போர் போன்ற புறக்காரணிகளால் ஏற்படுகின்றது.

## 7.7. சுருக்கம்

முதலீட்டின் செயல்பாட்டின் மூலம் முதலீட்டின் வகைகளை அறிந்து முதலீட்டினை தீர்மானிக்கும் காரணிகளைக் கூறுகின்றது. மூலதனத்தின் முதலீட்டுத்திறனின் மூலம் பணம், சந்தை, சமநிலை மற்றும் டுஆ வளைகோட்டினைக் குறித்த செயல்பாடுகளை விளக்குகின்றது.

குறிப்பு

## 7.8 முக்கிய வார்த்தைகள்

**திட்டமிட்ட முதலீடு:** திட்டமிட்ட முதலீடு ( ீடயெநென ழச நுஒயவெந ஐஎெநளவஅநவெ) என்பது தொழில் முயல்வோர்கள் முதலீடு செய்ய எதிர்பார்க்கின்ற முதலீடானது அளவைக் குறிக்கின்றது. திட்டமிட்ட முதலீடானது எதிர்பார்க்கும் முதலீடு எனவும் அழைக்கப்படுகிறது. இவ்வகை முதலீடு குறியிலக்குகளின் (வயசபநவள) அடிப்படையில் அமைகின்றது.

**திட்டமிடாத முதலீடு:** திட்டமிடாத முதலீடு (ருடீடயெநென ஐஎெநளவஅநவெ) என்பது தொழில் முயல்வோர்கள் எதிர்பாராமல் மேற்கொள்ளும் முதலீட்டைக் குறிக்கின்றது. குறியிலக்குகள் இல்லாமல் இவ்வகை முதலீடு அமைகின்றது. மோசமான விற்பனையினால் பொருள்தேக்கம் ஏற்படும் போது திட்டமிடாத முதலீடு நடைபெறுகின்றது.

## 7.9. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

### குறுகிய வினாக்களுக்கு விடையளி.

1.நிதி முதலீடு என்றால் என்ன?

2.தன்னிச்சையான முதலீடு, துர்ண்டப்பட்ட முதலீடு வேறுபடுத்துக.

### நெடுவினாக்களுக்கு விடையளி.

1.முதலீட்டின் வகைகளை விவரி.

2.முதலீட்டினைத் தீர்மானிக்கும் காரணிகளை விளக்குக.

## 7.10. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

1. it\;> M.C.(2005), ஹபேரியல் பொருளாதார கருத்தியல்'', விகாஸ் பப்ளிீங் ஹவுஸ், புது டெல்லி.

குறிப்பு

# அலகு 8: பெருக்கி

**அமைப்பு**



## 8.1. பொருள்

கீன்சின் வேலைக் கோட்பாட்டில் ஸ்ரீபெருக்கி' மிகவும் முக்கியமானதாகும். முதலீட்டின் விளைவு வேலை வாய்ப்பின் மீது எப்படி இருக்கும் என்பதை ஆராய வேலைவாய்ப்பு பெருக்கி என்ற கருத்தை 1931-ல் ஆர்.எப். கான் (R.F.Khan) பயன்படுத்தினார். கான் அவர்களின் கருத்தின் அடிப்படையில் கீன்ஸ் தனது முதலீட்டுப் பெருக்கி(stment multiplier) அல்லது வருவாய் பெருக்கி(Income multiplier) என்ற கருத்தினை உருவாக்கினார். கீன்சின் பெருக்கி கருத்தானது நுகர்வின் உளவியல் விதி, இறுதிநிலை நுகர்வு நாட்டத்தின் கெழு(ஊழ-நககஉைநைவெ) ஆகிய கருத்துக்களின் அடிப்படையில் அமைந்துள்ளது.

**பெருக்கி என்பதன் பொருள் :**

முதலீட்டில் ஏற்படும் அதிகரிப்பானது அதைவிட அதிகமான விகிதத்தில் வருமானத்தில் எவ்வாறு கொண்டு வருகின்றது என்பதை ஸ்ரீபெருக்கி' என்ற கருத்து விளக்குகிறது.

*சாமுவேல்சன்* : ஸ்ரீபெருக்கி என்ற எண்ணைக் கொண்டு முதலீட்டு மாற்றத்தைப் பெருக்கினால் வருவாயில் ஏற்படும் மாற்றம் என்னவாக இருக்கும் என்பதைக் காணலாம்".

*ஹேன்சன்*: கீன்சின் முதலீட்டு பெருக்கி என்பது அதிகரித்த முதலீட்டோடும், அதிகரித்த வருவாயோடும் தொடர்புடைய கெழுவாகும்".

கீன்சின் பெருக்கியானது தொடக்கத்தில் முதலீட்டில் ஏற்பட்ட அதிகரிப்பிற்கும், வருவாயில் இறுதியில் ஏற்படும் அதிகரிப்பிற்கும், வருவாயில் இறுதியில் ஏற்படும் அதிகரிப்பிற்கும் உள்ள தொடர்பை விளக்குகிறது.

கீன்சின் பெருக்கியானது முதலீட்டுப் பெருக்கி அல்லது வருமானப் பெருக்கி என அழைக்கப்படுகிறது. முதலீட்டில் ஏற்படும் மாற்றத்திற்கும்($\Delta I$) வருவாயில் ஏற்படும் மாற்றத்திற்கும்($\Delta Y$) உள்ள விகிதமே பெருக்கி(மு) எனப்படும்.

*பெருக்கி*

$$K=\frac{\Delta Y}{\Delta I}$$

**குறிப்பு**

மேற்கண்ட சூத்திரத்தின் மூலம் முதலீட்டில் ஏற்பட்ட மாற்றத்தால் வருவாயில் ஏற்பட்ட மாற்றத்தைக் கணக்கிடலாம்.

$$\Delta Y = \mathbf{K} \times \Delta I$$

## 8.2.பண்புகள்

**பெருக்கியின் பண்புகளைத் தொகுத்துக் கூறலாம்.**

**1.இறுதிநிலை நுகர்வு விருப்பம் மாறாமை:** பெருக்கி முழுக்கச் செயல்படவருவாய் பெருக்கம் ஏற்படும் பொழுது இறுதிநிலை நுகர்வு விருப்பம் மாறக் கூடாது. அதாவது நுகர்வுச் சார்பு நிலையானதாக இருக்க வேண்டும். ஏனென்றால் பெருக்கி இறுதிநிலை விருப்பத்தையே சார்ந்து அமைகின்றது. எதிர்பாராத காரணங்களினால் இறுதிநிலை நுகர்வு விருப்பம். மாறினால் பெருக்கியும் மாறும்.

**2.தானே முதலீடு ஏற்படல்:** முதலீடு தானே ஏற்படுவதாக இருக்க வேண்டும். தானே ஏற்படும் முதலீட்டில் மாற்றம் ஏற்படும். ஆனால் முதலீடு தூண்டப்பெற்றதாக இருக்காது. நுகர்வு கூடுவதால் முதலீட்டை தூண்டுகின்ற முடுக்கி செயல்படாது. முடுக்கி விளைவு இருந்தால் பெருக்கியிலும் மாற்றம் ஏற்படும்.

**3. கால இடைவெளியின்மை:** வருவாயைப் பெறுவதற்கும் அதனைச் செலவிடுவதற்கும் இடையில் நீண்ட கால இடைவெளி இருக்கக் கூடாது. கால இடைவெளி இருந்தால் பெருக்கி சரியாகச் செயல்படாது உடனுக்குடனே வருவாயைச் செலவிடுகின்ற பொழுது பெருக்கியும் உடனே செயல்படுகிறது.

**4. மூடிய பொருளாதாரமாக இருத்தல்:** பெருக்கி முழுமையாகச் செயல்பட பொருளாதாரம் மூடப்பெற்றதாக இருக்க வேண்டும். இன்னொரு வகையில் கூறினால் பிற நாடுகளோடு எந்த வகையான வணிகத் தொடர்பும் வைத்திருக்க கூடாது. வாணிபத் தொடர்பு இருந்தால் பெருக்கி கூடுதலாகவோ குறைவாகவோ செயல்படும்.

**5.முதலீட்டை நிலைநாட்டல்:** கூடுகிற புதிய முதலீட்டானதை பெருக்கி செயல்பட்டு முடியும் வரை நிலைநிறுத்த வேண்டும். தொடர் இடைவெளியில் ஒழுங்காக முதலீட்டளவு கூடிக் கொண்டு வந்தால்தான் பெருக்கி செயல்படும். முதலீடு கூடாவிட்டால் வருவாய் குறையும்.

